Ūḻiyaṉ

Malar 7, itaḻ 44

July 19, 1927

Record no. 148

சென்னைப் பதிவு ... கறுகு.

இதன் விலை அணு ஒன்றரை.

தந்தி விலாசம்:—"OOLIAN."

# ஊழியன்

சந்தா விபரம்.

| | |
|---|---|
| வருடச் சந்தா ... | ௩—0—0 |
| ஆறுமாதச் சந்தா ... | ௧—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ௪—0—0 |

செவ்வாய்தோறும் திகழ்வது.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

விளம்பர விகிதம்.

அங்குலம் ௧-க்கு வாரம் ௧-க்கு ௦-௮-0

நீடிமன்ற விளம்பரம் அங். ௧-க்கு ௧-0-0

ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக்காரியஸ் தருக்கு எழுதவும்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல் —திருக்குறள்

மலர் ௭. காரைக்குடி, பிரபவ-ஸு ஆடி-மீ ௪-௨ (௧௯—௭—௨௭) இதழ் ௪௪

## மலர் மணம்.

### கம்பரும் பெண்மையும்.

திரு.சா.நா.சா. அருணசலச் செட்டியார்.

நமது தமிழகத்தின் சரித்திர : இடைக் காலம் இருள் செறிந்த காலமாகத் தோன்றுகிறது. அதற்குமுன் தலைதூக்கி நின்ற ஆராய்ச்சியும் பிறவும் அப்பொழுது சிறிது தளரலாயின. சமண சமயம் பரவலாயிற்று. மூடபக்தி, மூடநம்பிக்கை மலியலாயின. அக்காலமே சிந்தாமணியின் காலமென்றுங் கூறலாம்.

* * *

நமது பழந் தமிழ் நூல்களில் பெண்களை இழிவாகக் கூறுவதைக் காண்கின்றோமில்லை. உயர்வாகக் கூறப்படும் பல சந்தர்ப்பங்களுள. தமிழர் போர்க் கடவுளாகக் கொற்றவை என்னும் பெண் தெய்வத்தைக் கொள்ளலாயினர். பழந் தமிழ்ப் பெண்மணிகளின் வீரத்தை விளக்கும் வரலாறுகள் புறநானூறு முதலிய சங்க இலக்கியங்களிற் காணப்படுகின்றன. அத்தமிழ் நாட்டில் அறிவாளிகளான எத்தனையோ பெண்கள் இருந்திருக்கின்றார்கள் என்பதற்குச் சான்றுகள் பலவுண்டு. இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கும் வரலாறுகளைக் கொண்டு நோக்கும்போது பெண்களில் கவிகளெத்தனை? கற்புடையாரெத்தனை? வீரரெத்தனை? அன்பும் அறிவும் அடக்கமும், ஒழுக்கமும் வாய்ந்தோரெத்தனை என்பது புலப்படும். பெண்கள் இத்துணைச் சிறப்புவாய்ந்திருந்த நாட்டிலே பெண்களை இழிவுபடுத்தும் ஓர் காலமும் வந்தது. அதற்கிரங்காது வேறென் செய்வது? அதுதானன்றோ நமது பிற்கால வாழ்வு அலங்கோலமானதற்குக் காரணமாயிற்பது?

* * *

சமண முனிவராகிய திருத்தக்க தேவரென்பார் இயற்றிய "சீவகசிந்தாமணி" யில்

"பெண்ணெனப் படுவ கேண்மோ
பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை யுடைய வல்ல
ஓராயிர மனத்த வாகும்
எண்ணிப்பத் தங்கை யிட்டால்
இந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க் குன்றெரியுற்றாற் போல்
மெலிந்து பின்னிற்கு மன்றே.

என்று கூறப்படுகிறது.

இது ஆடவரின் அறியாமையையும், சந்தேகத்தையும் மனப்பான்மையையும் காட்டுகின்றதேயன்றி வேறன்று. மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளைத் துறக்க வேண்டுமென்றும் காட்டுக்கேக வேண்டுமென்றும் எழுந்த அறியாமை நிறைந்த வீண் வேதாந்தமே இதற்குக் காரணமாகும்.

* * *

'சிந்தாமணி'க்கு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக்குப் பிற்பட்டது என்று கருதப்படும் 'கம்பராமாயணம்' முன்னதற்கு முற்றும் மாறாக இருக்கிறது. இதுகொண்டு பெண்ணின் பெருமை கூறும் நூல்கம்பராமாயணம்என்று கூடச் சிலர் கூறுகின்றனர். சிலர் அதையே தந்தைமொழி காத்தல் கூறும்நூல் என்றுங் கூறுவர். வேறு சிலர் காதலின் வெற்றி கூறும் நூல் என்பர். இன்னும் சிலர் சகோதரத்வம் கூறும் நூல் என்பர். அதில் எல்லாப் பொருளும் அடங்கியுள்ளன. அது பொதுவாக மனித வாழ்க்கைக்குரிய நூல் என்று கூறலாம். கம்பர் பெண்மையை எவ்வாறு நோக்குகின்றாரென்பதைக் கூறுவதே இக்கட்டுரையின் கருத்து. அதை விவரிக்குமுன் இன்னொரு பொருளை நோக்குதல் வேண்டும். கம்பராமாயண காலத்திற் பெண்ணைப்பற்றிய கருத்து மாறிவிட்டதோ என்று சந்தேகப்படுதற்கிடமில்லை. ஏனெனில் பிற்காலத்திய நூலாகிய 'நள வெண்பா'வில் 'காரிகையார் கண்ணே விலங்குவன மெய்ந்நெறியைவிட்டு" என்று கூறப்படுவதை நோக்கும் பொழுது அக்காலந்தொட்டு இக்காலம் வரையிலும் பெண்ணை இழிவுபடுத்தும் செய்கை தொடர்ந்தே வந்திருக்கிறதென்று நம்புதற்கிடமுண்டு.

* * *

இனி எடுத்துக்கொண்ட பொருளிற் புகுவாம். கம்பராமாயண நூற்றொடக்கத்திலேயே கவி

"ஆசலம்புரிஐம் பொறி வாளியும்
காசலம்பு முலையவர்கண் ணெனும்
பூசலம்பு நெறியின்புறஞ்செலாக்
கோசலம்புனையாற்றணி கூறுவாம்."

என்று கூறுகிறார்.

பெண்மக்களது கண்கள் நெறியின்புறஞ் செலாக் கோசலநாடு என்று கவி கூறுவது இராம ராஜ்யத்துக்கு அஸ்திவாரமிடுவதாகும். ஒருநாடு நன்னிலையிலிருக்கிறதா சீர்கேடுற்ற நிலையிலிருக்கிறதா என்பதை அளந்தறிவதற்கு அந்நாட்டிலுள்ள பெண்மக்கள் எவ்வாறிருக்கின்றார் என்பதை யறிதல் போதுமானதாகும். முற்கூறிய நளவெண்பா அடிகளை நோக்கும் பொழுது கம்பனைப் பின்பற்றும் புகழேந்தியும் இவ்விஷயத்தில் அவனோடு ஒவ்வாமைகாலத்தின் சக்தியோவோ என ஐயுறற்கிடனுண்டு. புகழேந்தியின் 'ஞானக்கலை வாழ் நகரு' க்கு நல்ல அஸ்திவாரமில்லை. மெய்ந்நெறியைவிட்டு விலகும் 'கண்களையுடைய காரிகையார் நிறைந்த நகர் என்னனம் ஞானக்கலைவாழ் நகராதல் கூடும்? இந்நுட்பமறிந்து நமது கவிச்சக்கரவர்த்தி பெண்மையின் சீலத்தை நூற்றொடக்கத்தில் அமைத்தமை பெரிதும் போற்றத் தகுவதாகும். இம்முறையிலேதான் காவியம் அமைக்கும் திறமை புலப்படுகிறது. காவியம் ஒரு கட்டடமாகும். அதற்கு நல்ல அஸ்திவாரம் வேண்டும். ஒன்றுக்கொன்று முரண் இருத்தல் கூடாது. ஒரே அளவாக இருத்தல்வேண்டும். அழகிய கட்டுக்கோப்பு வேண்டும். இம்முறையில் கம்ப ராமாயணம் ஒன்றே பூரண நிலை பெற்று விளங்குவதை அதனை ஆராய்ந்தோர் நன்கறிவர்.

* * *

முதலிற் பெண்மையின் ஒழுக்கம் கூறிய கவி பெண்ணின் பெருமையை அடிக்கடி ஞாபகமூட்டிக் கொண்டே செல்கிறார் "மாதரார் அன்பின் நின்றன அறங்கள்" என்று கல்வியிற் பெரியார் கூறுவது ஆழ்ந்து சிந்திக்கத்தக்கதாகும். அறங்கள் பொதுவாக மக்களது அன்பின் விளைவேனும் சிறப்பாக பெண்மக்களின் அன்பே அதற்குத் துணைபுரிவதாகும். ஆண்மக்கள் எவ்வளவு அன்புடையராயினும் அறிவுடையராயினும் பெண்மக்கள் அன்பிழந்து அறியாமைக்குழியில் கிடக்கும்வரை அவரால் ஒன்றும் செய்ய இயலாது. இது உலகத்தில் நாம் கண்கூடாகக் காணும் உண்மையாகும்.

* * *

"பெருந்தடங்கட்பிறை நுதலார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே"

இப்பாட்டிலுள்ள ஓர் நுட்பத்தைக் கவனிக்க வேண்டும். இக்கவியில் கம்பர் பெருமான் பெண்மக்களது கல்வியையும் செல்வத்தையும் விதந்தோதும் நயம் பெரிதும் பாராட்டற்குரியதாகும். திருவள்ளுவர் ஆண் மகனது கல்வியை விதந்தோதினார். நமது கவிச்சக்கரவர்த்தியோ பெண் கல்வியை விதந்தோதும் நுட்பம் என்னே! கோசல நாட்டிலுள்ள பெண்மக்களெல்லாம் செல்வமும் கல்வியும் பூத்து விளங்கினாராதலின், வருந்தி வந்தவர்களுக்குக் கொடுத்தலும் மீண்டும் விருந்தும் அன்றிவேறு அங்குவிளைவனயாவை? விருந்து என்பது ஈண்டு 'செல்வமும் கல்வியும் பூத்தலால்' என்பதால் வயிற்றுக்கும் செவிக்கும் விருந்தாமெனக் . "காதைகள் சோரிவன செவி நுகர்கனிகள்" என்றவாறு வயிற்றோடு செவிக்கும் அன்னார்கனி அளித்தனர்.

* * *

இன்னும், பெண்மையின் பெருமை கூறும் கம்பர்வாக்குகள் எண்ணில. விரிவஞ்சி சிலவற்றை ஈண்டுக்குறித்தேன். கவிஞானவர் கதா நாயகனைக் காட்டினும் கதாநாயகியை உயர்வாகக் கூறும் நயம் மிக்கு போற்றற்குரியதாகும் இராமனைச் சீதை அழகிலும் வென்றுவிடுகிறாள். காதலிலும் வென்று விடுகிறாள் வீரத்திலும் வென்றுவிடுகிறாள். பிற எல்லாவற்றிலும் வென்றுவிடுகிறாள் அவற்றையெல்லாம் விரிக்கிற் பெருகும். அதற்கோர் தனிக்கட்டுரை வேண்டும்.

* * *

பெண்மக்களுள்ளும் தீயோர் தாழ்ந்தோரில்லையோ எனின் அது இயல்பாகும். உலகில் எவ்வகுப்பாரிடையும் நல்லோரும் தீயோரும் இருத்தல் கண்கூடு. பொதுவாகவே ஈண்டு நான் பேசுகிறேன். உலகாகும் தாய்மையுடைய பெண்மணிகள் தீயோராயிருப்பது நாட்டிற்கே பெருங் கேடு என்பது அறிவாளர் கொள்கை. சில வேளைகளில் பெண்மைக் குணம் ஆண்மக்களிடத்தும் ஆண்மைக் குணம் பெண் மக்களிடத்தும் காணப்படும். "இரக்கமென்றொன்றுதானே ஏந்திழை வடிவமெய்தி" என்றபடி பெண்மை சிறப்பாக பெண்வடிவத்திலே விளங்குதல் இயற்கை. அவ்வாறே பிறவும்.

* * *

பெண்ணை இழிவுபடுத்தும்வரை நமது நாடு எத்துறையிலும் மேன்மையடையவாவது உரிமையடைவாவது முடியாது என்பது அறிஞர் கொள்கை. ஒருகால் சுயராஜ்யம் பெறினும் நாம் பெண்களை இழிவுபடுத்தி வருகின்றமையால், நாட்டின் பாதி தொகையினராகிய பெண்மணிகள் உரிமைபெறாதிருக்கின்றமையால் "அச்சுயராஜ்யம் உண்மையான சுயராஜ்யம் ஆகாது. பெண் மக்களும் மக்களே என்பதை உணருதல் வேண்டும். அவ்வாறு அவர் தம்மை யறிந்து தன் மதிப்புக் கொள்வதற்கு பெண்கல்வியாண்டும் பரப்பப்படல் வேண்டும். கல்வியே அவர் தம் கண்களைத்திறக்கும்.

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் [முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்"

மக்கள் பெண்ணின் பெருமை யோர்ந்து நாட்டை நாடாக்க முயல்வாராக.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

Best copy available

(திரு. மகாதேவதேசாய் அவர்கள் ஜூலை ௨-உ "இளம் இந்தியா"வில் எழுதியுள்ள வாரக்கடிதத்தின் மொழிபெயர்ப்பு.)

இவ்வாரத்தில் சொன அளவு ஓய்வு இருந்தது என்பதற்குச் சந்தோஷிக்கிறேன். பார்க்க வருவோரின் கூட்டம் சமாளிக்கக் கூடியதாயிருந்தது. ஆனால், ஓய்வைப்பற்றி மிக அழுத்திக் கூறுவது முடியாது என்பது நிச்சயம். ஏனெனில், பேசுவதிலோ அல்லது பிறரை எழுதச்சொல்லித் தான் சொல்லுவதிலோ (இப்பொழுது, திங்கட்கிழமை தவிர மற்ற நாட்களில் காந்தியடிகள் தாமே எழுதுவதில்லை) சொன ஓர் அளவு கடின வேலை, இன்னும் அவரை வாட்டிவருகிறது. வீட்டுக்கு வெளியில் செய்யப்படும் வேலை மாத்தொன்னப்படினும் கூட, வேலைக்கு இடை யிடையே ஓய்வும் சொக இருக்கவேண்டியிருக்கிறது.

## இன்னும் பார்க்கவந்த ஸ்திரீகள்.

சென்ற வாரத்தைப் பெண்கள் வாரமென்று நான் கூறியது சிறிதுகூட மிகைபடுத்திக் கூறப்பட்டதன்று. உண்மையில், அதில் விழுந்த பதிவுகள் மிக அதிகமாகும். எனவே அவற்றில் சில இவ்வாரத்திய கணக்கிற் றள்ளிக் கொண்டுவரப் படவேண்டும். (சென்ற வாரத்தில்) ஒரு நாள், பார்வைக்கு ஆடம்பரமற்ற, அமைதிகொண்ட ஸ்திரீ ஒருத்தி உள்ளே அழைத்துவரப் பெற்றாள். அவள் அறிமுகம் செய்விக்கப்பெற்ற விதம் மிகவும் நினைக்கக்கூடியதா யிருந்தது. அவள் சில வாழைப்பழங்களையும் கொடி முந்திரிப்பழங்களையும் காணிக்கையாகக் காந்தியடிகளின் முன் வைத்து, அறிமுகம் செய்விக்கப்பெறுவதற்காகக் காத்திருந்தாள். அவள் சார்பில் யாரோ ஒருவர் "இந்த நல்ல பெண்மணி ஒரு குழந்தை (பிறக்க) வேண்டுமென்று மிக ஆவலாயிருக்கிறாள்; தாங்கள் அவளை ஆசீர்வதிக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்ளும்படி, அவள் மூக்கியமாய் என்னைக் கேட்டுக்கொண்டாள்" என்று சொன்னார். பார்க்க வந்திருந்த ஆண்களும் பெண்களுமான பிறர் அங்கே உட்கார்ந்திருந்ததைக் கண்டு, அவள் சற்றும் மனக் குழப்பமெய்தவில்லை; தனது உள்ளத்தின் விருப்பம் காந்தியடிகளுக்குத் தெரிவிக்கப்பெற்றதற்குத் திருப்தி கொண்டவளாக, அவள் காணப்பெற்றாள். பரஸ்பரம் மொழிபெயர்த்துச் சொன்னவர் "மைசூரில் உள்ள அழகிய குழந்தைகளில் ஏதாயாவது ஒன்றை அவள் வளர்த்துக்கொள்ள முடியாதா" என்ற கேள்வியை, காந்தியடிகள் கேட்டபடி, அவளுக்குத் தெரிவித்தார். அவள் புன்னகை புரிந்தாள். காந்தியடிகள் விளக்க மிக்கவராக, "இல்லை; இந்நாட்டிலுள்ள ஏராளமான குழந்தைகளில் ஒன்றையோ பலவற்றையோ அவள் இஷ்டப்படி தெரிந்தெடுத்துக்கொண்டு, பட்டினியாய்க் கிடக்கும் குழந்தைக்கு உணவளிக்கும்படியும் உடையின்றிக் கிடக்கும் குழந்தைக்கு உடையளிக்கும்படியும் உணவும் உடையும் இருக்க இடமும் தேவையான குழந்தைக்கு அடைக்கல மளிக்கும்படியும் அவளைக் கேளுங்கள். அப்பொழுது, மைசூரிலுள்ள மகிழ்ச்சிகொண்ட தாய்கள் எவரினும் அதிக மகிழ்ச்சி கொண்ட தாயாக, அவள் இருப்பாள் என்று அவளுக்குச் சொல்லுங்கள்" என்று கூறினார். இது அவளுக்கு மொழிபெயர்த்துச் சொல்லப்பெற்றபொழுது, காந்திஜியின் அன்பொழுகு கண்களில் அவரது பொருளை அசேசமாய்த் தெரிந்துகொண்டவளாக, அவள் காணப்பட்டாள். "அவளுக்குத் திருப்தி யேற்பட்டதா என்று அவளைக் கேளுங்கள்" (என்று காந்திஜி கூறினார்.) பாசாங்கற்ற திருப்தியுடன் "சரி" என்று கூறிய அவள், தலை வணங்கி, அப்பாற் சென்றாள்.

(காந்திஜியின்) சொந்தக் கையெழுத்துப் பிரதிகள் வேண்டுமென்று இளவயதினர்

# வாரக்கடிதம்.

பலர் விரும்பினார்கள். பங்களூர் போன்ற ஒரு நாகரிக இடத்தில், இது அதிசயமல்ல, என்றாலும், கேட்டவர் யாவரும் பெண்களாயிருந்ததுதான் விநோதம். ஒரே விதமாக, அவர்கள் யாவரையும் (காந்திஜி) கேட்டதாவது:—"எனது நிபந்தனை உங்களுக்குத் தெரியுமா? எனது கையெழுத்து உங்களுக்கு வேண்டுமாயின், அதற்குள்ள விலையை நீங்கள் தரவேண்டும். கதர் உடுத்துவதாகவும் தினந்தோறும் அரை மணி நேரம் மதக்கடமையைப்போல நூல் நூற்பதாகவும் என்னிடம் வாக்களிப்பதுதான் விலை." "கையெழுத்துப் பிரதிகளை ஒட்டிவைப்பதற்கு ஏற்படுத்தியுள்ள நோட்டுப் புத்தகங்களில் மிகப் பிரபலஸ்தர்கள் பலரது கையெழுத்துப் பிரதிகளை நாங்கள் ஒட்டி வைத்திருக்கிறோமே" என்று அவர்கள் சில சமயம் வாதிக்கிறார்கள். "அவற்றை நீங்கள் வைத்திருக்கலாம். ஆனால், துரதிஷ்ட வசமாக, எனது கையெழுத்துப் பிரதிக்கு நான் ஓர் விலை ஏற்படுத்தி யிருக்கிறேன். ஆண்பிள்ளைகளை நூற்கக் கேட்டுக் கொள்வதில்லையெனினும், அவர்களையும் கூடக் கதர் உடுத்திக் கொள்ளும்படி நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன்" (என்று காந்திஜி கூறுவார்.) அவர்களிற் சிலர் ஒரு முடிவுக்கும் வரமுடியாமல், கையெழுத்துப் பிரதிகளை ஒட்டி வைப்பதற்குத் தங்களிடமுள்ள நோட்டுப் புத்தகங்களை வைத்துவிட்டுச் செல்வார்கள். என்றாலும், ஒரு பெண்மணி கையெழுத்துப்பிரதியை இந்த விலைக்குப் பெற்றுக்கொண்டாள். ஆனால், கையெழுத்துப் பிரதி, அவள் எதற்காக விலை பேசிக் கொண்டாளோ அதற்கு மாறாக இருந்தது. "ஒருவர் மண்டையை உடைத்துக்கொள்ளுவது என்பது என்னவென்று உங்களுக்குத் தெரியுமா" என்று அவர் அவளைக் கேட்டார். இதன் பொருள் விளங்காதவளாக, அவள் காணப்பட்டாள். கையெழுத்துப் பிரதியில் இருந்த விஷயமாவது:—"வாக்குத்தத்தத்தைச் செய்துவிட்ட நீங்கள் அதைக் காப்பாற்றுவீர்கள் என்று நான் நம்புகிறேன். ஒருவர் தமது வாக்குத்தத்தத்தை மீறுவது தமதுமண்டையை உடைத்துக்கொள்ளுவதைப் போலாகும்." கையெழுத்துப் பிரதியின் பொருளை விளக்கி, "நல்லது. ஒருவர் தமது மண்டையை உடைத்துக்கொள்வது என்றால், தற்கொலை செய்துகொள்ளுவதாகும்; வாக்குத்தத்தத்தை மீறுவதோ தற்கொலையினும் கேவலமாகும்" என்று கூறினார்.

## "ஒரு பக்தர்"

ஒரு நாள் பெரிய புகைப்படச் சட்டமொன்றையெடுத்துக் கொண்டு, முதியவரான ஒரு கனவான் உள்ளே வந்தார். அழகிய சித்திரங்களுடன் தெளிவான சிறிய எழுத்தில் பல நீதி வாக்கியங்கள் பொறிக்கப் பெற்றதும் நடுவில் காந்திஜியின் படத்தை உடையதுமான ஒரு காகிதம் அச்சட்டத்திற்குள் பொதிந்து வைக்கப்பெற்றிருந்தது. "இது ராமநாம மந்திரம். நீங்கள் நோயில் விழுந்த பொழுது, நான் இதை எழுத ஆரம்பித்தேன். இப்பொழுது இதைப்பூர்த்தி செய்து விட்டேன்" என்று அவர் விளக்கிக் கூறினார். "நீங்கள் இதைப் பூர்த்தி செய்ய முடிந்ததினால், நான்குணமடைந்து விட்டேனென்று நீங்கள் கருதுகிறீர்களா" என்று காந்திஜி வேடிக்கையாகக் கேட்டார். காந்திஜி தமது கருத்தை அறிந்து கொண்டதைக் கண்டு முற்றும் களிப்புற்றவராக "ஆம்," என்று அந்தநண்பர் கூறினர்! அடுத்தாற்போல், காந்திஜி அதைஇன்னும் கொஞ்சம்அதிகமாக நெருங்கிப் பரீட்சிக்கலானார். "ராமநாமத்தை எவ்வளவுதடவை நீங்கள் எழுதியிருக்கிறீர்கள்" (என்று காந்திஜி கேட்டார்.) "எனக்குத் தெரியாது" என்று அந்த நண்பர் கூறினர்.) காந்திஜி கூறியதாவது:— "ஆனால் அது எல்லாம் ராம நாமமல்லவென்று நான் காண்கிறேன். அதைத் தவிர வேறு எழுத்துக்களும் அதிலிருக்கின்றன." அவை அநேக மிருந்தன; அவற்றில் சிலவற்றை அவர் உரக்கப்படித்துக் காண்பித்தார். அவற்றில் மிக முக்கியமானவை கதருடுத்த வேண்டுமென்ற வாக்கியங்களே. காந்திஜி "ஆனால் நீங்கள் கதருடுத்திக் கொண்டிருக்கக் காணோமே" என்று, சிரித்துக் கொண்டே கூறினர்; குஜராத்தில் கூட்டங்களில் கதரை மிகவும் புகழ்ந்து பாடும்பெண்கள்தாங்கள் மெல்லிய அந்நியத் துணிகளை உடுத்திக் கொண்டிருப்பதைப் பலமாய் ஞாபகப்படுத்தினர். அந்த முதியவரான கனவானின் எண்ணம் நல்லது என்பது நிச்சயமே; ஆனால் தாம் செய்வதன் பொருளை, துரதிருஷ்ட வசமாக, அவர் கண்டு கொள்ளவில்லை. அவரால் கண்டு கொள்ள எப்படி முடியும்? மிக அற்ப விஷயத்திற்குக் கூட கடவுளிடம் நம்பிக்கை வைக்காமலே, கடவுளுடையபெயரை உலக முழுவதும் ஏற்றுக் கொள்கிறது! காந்திஜி கேட்டதாவது:—"சரி; நல்லது, அப்படியானால் நீங்கள் கதருடுத்துவீர்களா? நல்ல ஏற்பாடொன்று கூறுகின்றேன். ஹுட்லியில் கங்காதரராவின் இடத்திற்குச் சென்று அங்கே நிலையாய் இருங்கள். நாள் முழுவதும் நூல் நூற்று, கதர் வேலையை கற்றுக் கொள்ளுங்கள். கதரில் இந்தச்சித்திரங்களை எல்லாம் செய்யுங்கள்". "ஆனால் நான் என்னத்தைச் சாப்பிடுவது" (என்று அவர் கேட்டார்.) "அதைப்பற்றி நீங்கள் கஷ்டப்பட வேண்டியதில்லை. நீங்கள் உங்கள் வேலையைச் செய்யுங்கள்; கங்காதரராவ் உங்களைப் போஷிப்பார். உங்களுக்கு அங்கே மாம்பழம் உள்பட எல்லாம் கிடைக்கும்! உங்களுக்குச் சம்மதமா?" (என்று காந்திஜி கேட்டார்.) அவர் சம்மதப்பட்டவராகக் காணப்பட்டார்.

## ஸர் பிரஜேந்திரநாதஸீல்.

கல்கத்தாவினின்றும் திரும்பி வந்த ஸர் பிரஜேந்திரநாதஸீல் அவர்கள், காந்திஜீயைப் பார்ப்பதற்காக, பங்களூரில் இறங்கினர். அவரது விஜயம் எதிர்பாராதது. அது சந்தோஷத்தைத் தந்தது. பூஜிக்கத்தக்க இந்தக் கல்விமானைப் பற்றிச் சில தெரிந்து கொள்ளும் விலையற்ற பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அவருடைய பணிவு, அவருடைய ஆழ்ந்த கல்வியினும் ஆழ்ந்ததாகவிருக்கிறது; உண்மையான கல்வியின் அறிகுறியாக விருக்கிறது. அவர் கூறியதாவது:—"நீங்கள் நோயுற்றிருக்கையில் உங்களைத் தொந்திரவு செய்ய, எனக்கு இஷ்டமில்லை. ஆனால், இப்பொழுது நான் உங்களுக்கு எனது வணக்கத்தைச் செலுத்த வேண்டுமென்று கருதினேன்."

"உங்களைப் பார்க்கும் சந்தோஷத்தைப் பெறாமலே மைசூரைவிட்டு நான் செல்ல வேண்டியிருக்குமோ என்று நானும் கூட ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தேன். நீங்கள் வந்ததனால் மகிழ்வெய்தியுள்ளேன்."

காந்திஜி புன்முறுவலுடன் ஸர் பிரஜேந்திரநாதரின் தாடியைப் பார்த்துக் கொண்டே, மேலுங் கூறியதாவது:—"நீங்கள் எனக்கு எவ்வளவு வயது அளிக்கிறீர்கள்? ஸர் சுரேந்திரநாதர் இறக்கு முன்னர் அவரை நான் பார்த்த பொழுது, அவருக்கு வயது எழுபது; நூறு வயது வரை தாம் உயிர்வாழப் போவதாக, அவர் நம்பிக்கை கொண்டிருந்தார்."

"அழியாத் தன்மை கொண்ட, அழியாமையை உருசி பார்த்துவிட்ட உங்களுக்கு, நான் என்னத்தை அளிக்கமுடியும்" என்றார் ஸர் பிரஜேந்திரர். 'ஆழ்ந்த சிந்தனையாலும்' கிம்மதி சில நிமிஷ நேரம் வரை நிலவியது.

இந்தக்கல்விமானிடமிருந்து சில விஷயங்களைத் தெரிந்து கொள்ள ஆவலுற்ற ஒருவரைப் போல, காந்திஜி "நான் அறியலாமா, வங்காள இளைஞர்கட்கும் இப்பகுதிகளிலுள்ள இளைஞர்கட்கும் என்ன வேற்றுமையை நீங்கள் காண்கிறீர்கள் என்பதை நான் அறியலாமா" என்று கேட்டார்.

ஸர் பிரஜேந்திரர் ஒருவிநாடி யோசனை செய்துவிட்டுக் கூறியதாவது:—"வங்காள இளைஞர் உணர்ச்சியால் தூண்டப்பெறுபவர், உயர்ந்த இலட்சியங்களைக் கொண்டவர். அவர்கள் பெற்றிருக்கும் குணத்தைக் கற்பனை கொண்ட உணர்ச்சி அல்லது ஓரளவு உணர்ச்சி கலந்த கற்பனை என்று நான் கூறலாம். உறுதியில்லாமையினால் அவர்களது உயர்ந்த இலட்சியம் நிறைவேறாது போகிறது என்று நான் நிச்சயமாய்க் கூற மாட்டேன். தென்னிந்திய இளைஞரோ (வங்காள இளைஞரைவிட) அதிகமாக அனுபவ விஷயங்களில் மனத்தைச் செலுத்துபவர்; எந்த விஷயத்தையும் கற்க ஆவல் கொள்பவர்; அனுபவ விவகாரங்களில் ஒவ்வொரு சிறு விஷயத்தையும் நன்றாய் அறிந்து கொள்ள ஆவல் கொண்டவர்."

காந்திஜீ மிகவும் சிரத்தை கொண்டவராக, "உங்கள் அபிப்பிராயம் அதுவா" என்று வினவினர்.

"ஆம். அது ஒரு காரணத்தினால். ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக, வங்காளம் பௌத்த செல்வாக்கிற்கு அதாவது பௌத்த நாகரிகத்தின் செல்வாக்கிற்கு உட்பட்டிருந்துவருகிறது. வங்காளிகளின் மனத்தில் அது தனது பதிவை விழச்செய்திருக்கிறது. இப்பகுதிகளில் தீண்டாமை எந்த உருவத்தில் உள்ளதோ அந்த உருவத்தில் அதைநீங்கள் அங்கே காணமுடியாது. ஆனால், பௌத்த நாகரிகம் வங்காளிகளைத் தனித்துப் பிரிந்து நிற்பவர்களாகவும் செய்துவிட்டது. ஒவ்வொரு சமயத்தில் இதற்கு மாறானவர்களும் மேதாவிகளும் தோன்றுகின்றார்கள்; என்றாலும், நான் விவரித்தது பொதுவாக உள்ளவர்களையே. ஆனால், அங்குள்ள சாராசரி இளைஞர் ஏனைய பகுதியிலுள்ள இளைஞரினும் சிறிது கீழேயே இருக்கின்றனர்."

தாம் குறிப்பிட்ட மேதாவிகளில் தாமும் ஒருவர் என்பதை ஸர் பிரஜேந்திரர் உணர்ந்திருந்தாரா என எவரும் ஆச்சரியப்பட்டிருப்பர். அத்தகைய ஐயமெதற்கும் இடம் வைக்காதவர்போல, மேலும் அவர் கூறியதாவது:—"என்னையே மனத்திற்கொண்டு, இந்தச் சாராசரி இளைஞரைப் பற்றிப் பேசுகிறேன். பிறரைவிட அதிக நன்றாக, என்னைப்பற்றி நான் அறிந்திருக்கிறேன் என்று கருதுகிறேன். ஒரு விசேஷத் தனித் தன்மையையும், உறுதியையும் மகத்தான பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான சக்தியையும், தென்னிந்திய இளைஞர் பெற்றிருக்கின்றனர். கணிதம், சட்டம் முதலியன போன்றவற்றில் அவர்களுக்கு நல்ல ஞானம் இருக்கிறது. வேறெவ்விடத்திலும் காணமுடியாத பிடிவாதமும் துணிவும் அவர்கள் பெற்றிருக்கிறார்கள். அதனால் அவர்கள் சண்டை போடுபவர்களாகவும் இருக்கிறார்கள். பிறரது அபிப்பிராயத்தினின்றும் தாங்கள் வேறுபடுவதைத் தென்னிந்திய இளைஞர் அறிவிப்பதைப்பாருங்கள். 'இல்லை, இல்லை, இல்லை' என்று, ஒரு விசேஷ வேகத்தோடு அவர்கள் கூறுவார்கள். வைஷ்ணவ மதத்தின் பிரிவுகளுக்குள் உள்ளதுபோன்ற் நாம் இங்கேனும் கூர்மையான வேற்றுமைகளுக்கு இதுதான் காரணம்."



# வாரக்கடிதம்.

(கூம் பக்கத் தொடர்ச்சி.)

காந்திஜீ கேட்டதாவது:—"தென்னிந்தியரது துணிவைப்பற்றிப் பேசுகிறீர்களே? ஆனால், வங்காளத்தின் மகத்தான தியாகத்தையும் துணிவையும்பற்றி என்ன?"

"இறப்பதற்குத் துணியும் துணிவா உங்கள் கருத்து" என்று ஸர் பிரஜேந்திரர் வினவினர்.

"ஆம்."

"ஆனால், வங்காளத்தில் உயிர் வாழ்வதற்கான துணிவு எங்கே யிருக்கிறது?"

காந்திஜீ கூறியதாவது:—"நிச்சயமாய், நிச்சயமாய், தொங்கிக்கொண்டிருக்கும் உங்கள் தாடியுடன் நீங்கள் அவ்விதம் கூறமுடியாது. போராற்றல் கொண்ட ஸர் சுரேந்திரநாத பானர்ஜியும் கவியும் (ரவீந்திரர்) உதாரணங்களாக விருக்கின்றனர். கவி (ரவீந்திரர்) இந்த வயதிலும் பதினேழு வயது இளைஞரைப்போல், பூரணத்தேக வலுவுடன் குதூகலமாக விருக்கின்றார். மேலும், பரோடாடா இல்லையா?" பரோடாடாவின் பெயரைக் கேட்டதும் ஸர் பிரஜேந்திரர் தாம் பேசிக்கொண்டிருந்த விஷயத்தை ஒரு விநாடிநேரம் மறந்துவிட்டார். கவியும் பெரியாருமான அந்தத் தத்துவஞானியைப்பற்றி, அவர் மனப்பூர்வமாக, பக்தியுடன் புகழ்ந்தார். பரோடாடாவைப் பறவைகள் அன்போடு மூக்கால் கொத்தும்; எவ்விதப் பயஉணர்ச்சியுமின்றி, அவை அவருடன் விளையாடும்.

அவர் (ஸர் பிரஜேந்திரர்) தமது வாதத்தின் தொடர்ச்சியை மறுபடியும் ஆரம்பித்து, பல ஆண்டுகளுக்குமுன் உலகப் பந்தயங்களின் காங்கிரஸின் அங்கத்தினருக்கு அவர் அளித்ததுபோல, தமது பக்குவமடைந்த சிந்தனையின் கனிகளை எங்களுக்கு இன்னும் அளிப்பார் என்று நாங்கள் எண்ணியிருந்தோம். ஆனால், அவர் "ஆனாலும், இந்தியாவைப்பற்றி நல்ல அனுபவம் வாய்ந்த ஒருவருக்கு இதை யெல்லாம் பற்றிச் சொல்ல, நான் யார்" என்று சொல்லி முடித்துவிட்டார்.

அவர் தாம் வர முடிந்ததற்கு மறுபடியும் தமது சந்தோஷத்தைத் தெரிவித்து, மெல்லத் தலைவணங்கி, படுக்கையில் படுத்திருந்த காந்திஜியின் அடிகளைத் தொட்டார்.

காந்திஜி ஆழ்ந்த உணர்ச்சியுற்றவராக, "என்னைத் தாழ்மைப்படுத்த வேண்டாமென்று வேண்டுகிறேன்" என்று கூறி, பணிவுடன் தலைவணங்கினர்.

---

பெர்லினில் மிக மெல்லிய இரும்புத் தகடு செய்யப்பட்டிருக்கிறது. அது கண்ணாடிபோல, மறுபுறத்திலுள்ள பொருள்கள் தெளிவாய்த் தெரியும்படி, அவ்வளவு மெல்லியதாய் இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

* * *

ஸ்விட் ஜர்லாண்டைச் சேர்ந்த ஜூரிச் என்னுமிடத்திலுள்ள பல தொழிற்பயிற்சிச் சாலை யொன்று இருக்கிறது. அதில் விநோதமான, சுவரில் மாட்டும் கடிகாரம் ஒன்று இருக்கிறது. அதற்குச் சாவிகொடுப்பதே யில்லை; ஆனால், அதுவாகவே ஓடிக்கொண்டிருக்கிறது. தட்பவெப்பநிலை எவ்வெப்பொழுதெல்லாம் இரண்டு டிகிரி ஏறுகிறதோ அல்லது இறங்குகிறதோ அவ்வப்பொழுதெல்லாம் இந்தக் கடிகாரம் தானே சாவி கொடுத்துக் கொள்ளுகிறது எனப்படுகிறது.

# பெண்ணுரிமை.

(திரு. மு. கிருஷ்ண சர்மா பாடியன.)

இனைய கூறிநம் உளங்கள்புண் ணுறுவதென் பயனும்
அனைய வைதிகப் பழங்கொடுங் கொள்கைநூல் அனைத்தும்
இனியொர் பாலினும் இன்றென அங்கிவைத் தெரிப்பின்
சனிதொ லைந்ததென் றளவிலா மகிழ்ச்சியாம் சார்வாம்.

பண்டை நாளுடன் கட்டையிற் பாசிழை யாரைக்
கொண்ட காதல னிறந்தவ ஞேடெரிக் கொளுவிக்
கண்டு மைந்தரும் உறவின ருங்களைத் தழுவார்
எண்டி சைக்கணும் உண்டுகொல் இத்தகைக் கொடுமை.

இப்படிக்கொரு மடக்கொடு விதிஎழு தினரைப்
பொய்ப்ப டிப்புறு பேதையர் கொடியவர் புல்லர்
எப்படிக்கருள் இருக்குமென் றறிந்திலர் என்று
செப்பி டிற்சிலர் வைதிகர் எமைச்சின ப்பாரே.

சிரி தவ்விதி எனச்சொலும் தீயவர் க்கண்டு
பூரியீர் நுமால் நாடெலாம் பொன்றின என்று
கூறி தாயவாள் கொடுபல நுணிபடக் குறைத்து
வாரி ஆழியில் எறிந்துயர் வாழ்க்கையைப் பெறுவோம்.

அல்லல் செய்குநர் தம்மையும் பொறுப்பிரென் றறைந்த
நல்ல காந்தியின் அடியையோ எனஎனை நவிலீர்
ஒல்லு மாறுளம் ஒடுங்கின ராயினும் பொறைக்கோர்
எல்லை யுண்டுகொள் இன்றுகொல் நீவிரே யிசைப்பீர்.

கட்டை அங்கியிற் கனன்றழும் மாதர்மெய் சிறிது
சுட்ட பின்பெழு வாரெனிற் சூழநின் றவர்தாம்
கிட்டி நீள்கவைக் கொம்பினுற் கீழுற அழுத்திக்
கட்டு வார்களாம் இரும்பியல் விலங்கினுற் கால்கை.

செற்றம் மிக்கிது புனைந்துயான் செப்பினென் என்று
சற்றும் ஐயுறீர் நம்முடைப் பழஞ்சரித் திரத்துள்
உற்று நோக்கிடிற் செம்மையர் உறுதுயர் யாவும்
கற்று ணர்ந்திடலாமிது பழங்கதை யின்றே.

௧௨ அணா மதிப்புடைய ஷில்லிங்கு நாணயத்தில் ஒன்றே முக்கால் அணா மதிப்புள்ள வெள்ளிதான் இருக்கிறதாம்.

* * *

சீனரில் சிலர் தங்களைவிட உயர்ந்த அந்தஸ்திலுள்ளவர்களை வந்திக்கும்பொழுது, மூக்குக் கண்ணாடியை எடுத்துவிடும் வழக்கமுடையவர்களாயிருக்கிறார்களாம்.

* * *

தற்கொலைசெய்துகொள்ளுவதற்குச்சீனர் கையாளும் ஒருவழி அடிக்கடி உப்பைத் தின்பது எனப்படுகிறது. உப்பு அதிகமாய்த் தின்றால் மிகவும் கஷ்டப்படுத்தக் கூடிய விஷயமாம்.

* * *

இங்கிலாந்திலுள்ள கடிகாரங்களுள் மிகப் பழமையானது வெல்ஸ் மாதாகோவிலில் உள்ள கடிகாரமே. அந்தக் கடிகாரத்தைக் காத்துவந்த ஆளுக்கு ௧௬௬௪-ம் ஆண்டில் ஆண்டு ஒன்றுக்கு ௧௦ ஷில்லிங்கு சம்பளம் அளிக்கப்பெற்றதாம்.

* * *

அமெரிக்காவிலுள்ள வடகானடா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைச் சேர்ந்தது. அங்குள்ள எஸ்கிமோஜாதியாருள் விவாகம் பலவந்தமாயிருக்கிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் அவனால் எவ்வளவு மனைவிகளைப் போஷிக்க முடியுமோ அவ்வளவு மனைவிகள் உண்டு. அங்கே எல்லாருமே நல்ல குணமுடையவர்களாயிருக்கிறார்கள். கோபம் வந்தால் பிசாசு பிடித்திருப்பதாக, அவர்கள் எண்ணுகிறார்கள். பொய்க்கு மரண தண்டனை விதிக்கப்படுகிறது எனப்படுகிறது.

சீனாவில் வெளியாகும் "பெகின்கெஜட்" ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளாக, நில்லாமல், பிரசுரிக்கப்பெற்று வருகின்றதாம்.

* * *

யாபீன் என்னும் விஷம் இருதயத்திற்குத் தீமை புரியக்கூடியது; இந்தவிஷம் காபியிலும் தேயிலையிலும் இருக்கிறது என்று தெரிகிறது.

* * *

லண்டன் தபால் ஆபீசுகளில் ௧௧௨௬-ம் ஆண்டு துவங்கி, ௨,௪௫,௯௭௪ காய் லைசன்சுகள் விற்கப்பெற்றனவாம்; அதனால் கிடைத்த தொகை ௧௨,௨௧௯ பவுன்கள் என்று தெரிகிறது.

* * *

அமெரிக்காவினின்றும் அட்லாண்டிக் மகாசமுத்திரத்தைத் தாண்டி ஐரோப்பாவுக்கு ஒரே மூச்சாய் ஆகாயப்பிரயாணம் செய்த காப்டன் லிண்டன்பர்க்கை மணந்துகொள்ள அநேகம் பெண்கள் விரும்புகிறார்களாம்.

* * *

கற்பூர மரங்களில் சிலவற்றில் கற்பூரம் கிடைக்கும்; சிலவற்றிலோ கற்பூரத் தைலந்தான் கிடைக்கும். தைலத்தினால் கிடைக்கும் வருமானம் குறைவாகும். ஒரேவிதமான மரங்களில் சில கற்பூரம் விளைய, சிலவற்றினின்றும் தைலம் மட்டில் கிடைப்பதன் மர்மம் இப்பொழுது ஜப்பானியருக்கு மட்டிலுமே தெரியுமாம். மீதி உலகத்திற்குத் தெரியாதாம். இந்த மர்மம் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டால், கற்பூர வியாபாரத்தில் ஜப்பான் ஏக போகம் பெற்றிருப்பதை இழந்துவிடுமாம்.

# துணுக்குகள்.

மனிதரது கண்கள் இயங்குவதில் ௬ தசைகளால் செலுத்தப்படுகின்றனவாம்.

* * *

மீனிலும் ஜாதிக்காயிலும் கூட விஷமிருக்கிறதாம்.

* * *

சில பூச்சிகளுக்குக் காலில் காது இருக்கிறதாம்.

* * *

சீன பாஷையின் சில சொற்களுக்கு ௬௦ பொருள்கள் வரை இருக்கின்றனவாம்.

* * *

மரங்களுக்குள் மிக வேகமாய் வளர்வது மூங்கில் அது மழைக்காலத்தில் நாளொன்றுக்கு ௩ அங்குலம் வீதம் வளர்கிறதாம்.

* * *

பழ வகை உணவில் பிரிட்டன் சென்ற ஆண்டில், முந்திய ஆண்டைவிட அதிகமாக ௨,௦௦,௦௦௦ பவுன்கள் செலவழித்துளதாம்.

* * *

ஹிப்போ படமஸ் எனப்படும் நீர்யானையின் தோல் சராசரி இரண்டு அங்குலப் பருமன் இருக்கும்.

* * *

பட்டுப்பூச்சியின் கூடு ஒன்றிலிருந்து கிடைக்கக்கூடிய பட்டு நூல் ௫௦௦ முதல் ௧,௨௦௦ கஜம் வரைக்கு மிருக்கும் எனப்படுகிறது.

* * *

கொசுக்கள் எப்பொழுதும் தண்ணீருக்கு மேலே முட்டையிடும். அந்த முட்டைகள், படகுபோல, ஒன்றுடனொன்று பிணைந்து கொண்டிருக்கும்.

* * *

பிஜித் தீவில் தந்தைகள் தங்கள் மகன்களுக்குச் சாயை அடிக்கப் பழக்குவிக்கிறார்களாம். எதற்காக வெனில், அவர்கள் கோழைகளாகாமல் இருப்பதற்காகவாம்!

* * *

ஒரு ஜோடி சாராய் (ஸ்டாகிங்ஸ்) களில் உள்ளபட்டு ௬௬௬ பட்டுப்பூச்சிகளின் பட்டு நூலைக்கொண்டது என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

* * *

கிரேட்பிரிட்டனில் ௧௯௦௦-ம் ஆண்டில் ௩௦,௦௦,௦௦௦ பெண் தொழிலாளர் இருந்தார்கள்! இப்பொழுதோ ௫௦,௬௫,௨௯௪ பெண் தொழிலாளர் இருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது.

* * *

இங்கிலாந்தில் பார்ன்ஹாம் என்னுமிடத்தவரான திரு. எப். டி. டேவிஸ் என்பவர் வீட்டில் டிட்டின்ஸ் என்ற ஒரு பூனைக்குட்டி இருந்தது. ஐந்து ஆண்டுகளுக்கு முன், அது காணாமற் போய்விட்டது. சமீபத்தில் அது வீட்டுக்குத் திரும்பிவந்து சேர்ந்தது. வந்து சேர்ந்தபொழுது, அது பட்டினியாயும், களைத்து மிருந்தது என்று கூறப்படுகிறது.

* * *

ஸ்விட் ஜர்லாந்தில் ஆப்வால்டன் என்னுமிடத்தில் எண்பது ஆண்டுகளுக்கு முன் நிறைவேற்றப்பட்ட, ஆனால் அமுலுக்கு வராதிருந்த ஒரு சட்டத்தை, அவ்விடத்திய அரசாங்கத்தார் இப்பொழுது மறுபடியும் கொண்டுவந்திருக்கிறார்களாம். ஆணாயிருப்பினும் சரி பெண்ணாயிருப்பினும் சரி, பதினெட்டு வயதுக்குட்பட்டவர் எவரேனும் சுருட்டுக் குடித்தால், அவர்களுக்கு ஒருவாரச் சிறைத்தண்டனையும் ௫ பவுன் அபராதமும் விதிக்கப்படும்; இக்குற்றம் இரண்டாவது முறை செய்யப்படின், தண்டனை இரட்டிக்கப்படும் என்பதே இந்தச் சட்டம்.

---

கப்பன்:—ராமு! நேற்று சாயங்காலம் கடைவீதியில் உன் தகப்பனுர் என் பக்கமாகச் சென்ருர். அப்படியிருந்தும், என்னைப்பார்க்காமல் போனுர்.

ராமு (ஞாபகமறதியாக):— ஆமாம்; அவரும் அப்படித்தான் சொன்னுர்.

ஃ ஃ ஃ

ராமன்:—யாராவது ஒரு மனிதன் முட்டாள் என்று உன்னைக் கூப்பிட்டால், நீ என்ன செய்வாய்?

கிருஷ்ணன்:—எப்படிப்பட்ட மனிதன்? பெரிய ஆளா, சின்ன ஆளா?

ஃ ஃ ஃ

தாய்:—நீ விளையாடப்போக ஆசைப்பட்டால், ஏன் முதலில் என்னிடம் வந்து கேட்டுக்கொண்டு போகவில்லை?

மகன்:— நான் விளையாடப்போக ஆசைப்பட்டதால்.

ஃ ஃ ஃ

பணக்கார வீட்டுக் குழந்தையொன்று தெருவில் சென்ற நாலைந்து ஏழைக் குழந்தைகளைக் கண்டது. அவைகளெல்லாம் கந்தையான அழுக்குத் துணிகளைக் கட்டிக்கொண்டு, உடல்வாடிச் செல்லுவதைப் பார்த்து, "இவர்களுக்கெல்லாம் அம்மாள்தான் இருக்கிறுள்போலிருக்கிறது. வேலைக்காரி இல்லையாக்கும்" என்று, பணக்கார வீட்டுக் குழந்தை சொல்லிக்கொண்டது.

ஃ ஃ ஃ

"என்ன, பையா! இன்று தினம் நான் உன் தகப்பனுரைக் கண்டு பேசலாமா?"

"அப்பா நியாயஸ்தலத்திற்குச் சென்றிருக்கிருர்."

"ஒரு மாதத்திற்கு முன்னும் இப்படித்தானே சொன்னுய்?"

"ஆமாம்; அவர் இன்னும் திரும்பி வரவில்லையே."

## விநோதக் கொத்து.

கோபு:—அந்த இருவரும் கணவனும் மனைவியுமோ?

பாபு:—இல்லை. அவ்விருவரும் மனைவியும் கணவனுமாவர்.

ஃ ஃ ஃ

யாசகர்:—முதலாளி அவர்களே! இந்தத் தர்மத்திற்கு நீங்கள் ஏதாவது கொடுப்பீர்கள் என்று எண்ணிவந்திருக்கிறேன்.

முதலாளி:—சரி, இந்த 'செக்'கை எடுத்துக்கொள்ளுங்கள். அவ்வளவுதான்.

யாசகர்:—ஆனுல், அதில் கையெழுத்துப்போட மறந்து விட்டீர்களே.

முதலாளி:—வேண்டுமென்றேதான் போடவில்லை. ஆடம்பரமாகத் தர்மம் செய்ய எனக்கு இஷ்டமில்லையாதலால், என் பெயர் வெளிவர வேண்டாமென்பது என் விருப்பம்.

ஃ ஃ ஃ

ஒரு காபி ஒட்டல் குமாஸ்தாவேலையை விட்டு விலகும்படி நோட்டீஸ் கொடுக்கப்பெற்ருர். எனவே, விலகப்போகும் சமயம். ஒருவர் தாம் சாப்பிட்டதற்கு அவரிடம் வந்து கணக்குச் சொன்னுர். "நீங்கள் என்ன சாப்பிட்டீர்கள்? அல்வாவா, ரவாப் பொங்கலா" என்று குமாஸ்தா கேட்டார். "அது என்னஇழவோ! வேகாத புளிமாதிரி புளித்தது" என்று உறுமினுர் கணக்குக் கேட்டவர். "சரிதான். அதுதான் அல்வா. ரவாப்பொங்கலாயிருந்தால் அது பழஞ்சோறு மாதிரி உருசிக்கும்" என்ற குமாஸ்தா, கணக்குக் கூறிமுடித்தார்.

வீட்டு எஜமானி கோபங்கொண்டவளாக, "எனடா! சோறுபோட்டால், புல்லைச் செதுக்கிச் சுத்தம் செய்வதாகச் சொன்னுயே? இப்பொழுது என்ன உனக்குக் கேடுவந்துவிட்டது" என்ருள்.

ஊர் சுற்றும் சோப்பேறி:— ஆம், அம்மா! நான் செதுக்குவேன். ஆனுல், கண்டவர்களை யெல்லாம் நம்பக்கூடாது என்ற பாடத்தை உங்களுக்குக் கற்பிக்கவேண்டும் என்ற எண்ணத்தினுல்தான், நான் அதைச் செய்யாமற் போகிறேன். நான் உங்களை ஏமாற்றவில்லை.

ஃ ஃ ஃ

அண்ணுமலையும் வீரப்பனும் மெஸ்மெரிசம் கற்றுவந்தார்கள். ஒருநாள், ஒருவர் மனத்தில் நினைப்பதை இன்னெருவர் அறிந்து சொல்லுவதைப் பழக எண்ணினுர்கள்.

அண்ணுமலை:—வீரப்பா! இப்பொழுது என் மனத்தில் என்ன நினைத்திருக்கிறேன் என்பதைச் சொல், பார்ப்போம்.

வீரப்பன்:— நீ நினைத்தது என்னவெனில், இப்பொழுது உன்னை நான் நூறு ரூபாய் கடன் கேட்பேனுயின் அடுத்த மாதம் வரை கொடுக்கமுடியாதென்று சொல்ல எண்ணியிருக்கிருய்.

அண்ணுமலை:—இல்லவேயில்லை.

வீரப்பன்:—நிசந்தானு? அப்படியானுல், இப்பொழுதே கொடுத்துவிடப் போகிருயா?

மாமன்:—செல்லக்கண்ணு! நீ பைசாக்கள் விஷயத்தில் ஜாக்கிரதை யெடுத்துக் கொண்டால், அணுக்கள் தாமே ஜாக்கிரதையாயிருக்கும்.

மருமகன்:—பைசாக்கள் விஷயத்தில் நான் ஜாக்கிரதை எடுத்துக்கொள்ளுகிறேன். ஆனுல், அவை அணுக்களாய்ப் போனபின், அப்பா அவற்றைப்பற்றி ஜாக்கிரதை யெடுத்துக் கொள்ளுகிருர்.

ஃ ஃ ஃ

எஜமானன் தமது புதிய வேலையாளைக் கூப்பிட்டு "அடே! உள்ளே ஜோடுகள், இருக்கின்றன. அவற்றில் ஒரு ஜோடியை எடுத்துக்கொண்டுவா" என்ருர். வேலையாள் சிவப்பு ஒன்றும் கறுப்பு ஒன்றுமாக ஒரு ஜோடியை எடுத்துவந்தான். எஜமானனுக்குக் கோபம் வந்துவிட்டது. "என்னடாயிது! விநோதமான ஜோடியாயிருக்கிறதே" என்று இரைந்தார்.

"ஆமாம் எஜமானே! எனக்கும் விநோதமாய்த்தான் இருக்கிறது. இந்த ஜோடி மட்டினுமல்ல; இன்னெரு ஜோடியும் இதேமாதிரிதான் இருக்கிறது" என்ருன் வேலையாள்.

ஃ ஃ ஃ

மகன்:—அப்பா! அம்மாவுக்கு நான் நிரம்பத் தொந்திரவு கொடுக்கிறேன். அதை நினைத்துப் பார்த்தால், எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது.

தந்தை:—அதுதான் நல்ல பையனுக்கு அடையாளம். இனிஒழுங்காயிரு.

மகன்:—சரி, அப்பா! அப்படியே செய்கிறேன். என்னை ஏதாவது சாமான் வாங்கக் கடைக்கு அனுப்பினுல், கோமாய் விடுகிறது. அம்மாவுக்கு அது கஷ்டமாய்ப்போகிறது.

தந்தை:— அப்படியானுல், இனி சீக்கிரம் திரும்பிவந்து விடவேண்டும்.

மகன்:—அதுதான் எனது உத்தேசம். நீங்கள் ஒரு சைகிள் வாங்கித் தருகிறீர்களா?

---


### புத்திர சந்தான எண்ணெய்.

ஸ்திரீகளின் கர்ப்ப ஸ்தானத்தில் புழுக்களுண்டாகி அவ்வப்போது விந்தைப் புசித்து வருவதினுலும், மற்றும் பல காரணத்தினுலும் கர்ப்ப ஸ்தானத்தில் சதை வளர்ந்து சொரி பற்றி ரத்தம் கட்டியிருந்தாலும் மூலச் சுழியில் வாய்வு, பித்தம் தங்கினுலும் கருத தரிக்காது. இந்த எண்ணெயைக் காலை மாலை இரு வேளையும ஒன்று அல்லது இரண்டு காசு அளவு உள்ளங்கையில் விட்டு நக்கிச் சாப்பிடவேண்டியது. இப்படி 15 நாள் சாப்பிட்டால் கர்ப்பாசனத்திலிருக்கும் ஆறுவித குற்றங்களையும் நீக்கிச் சுத்தப்படுத்தி மறு மாதத்திலேயே கர்ப்பந்தரிக்கும். சிலருக்கு கருத்தரித்து 2, 3, 4 மாதங்கள் வரையில் சூலாயிருந்து திடீரென்று உடைந்து போவதுண்டு. இப்பேர்க்கொத்த கர்ப்ப தோஷமெல்லாம் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கருதரிக்கும்.

இதன் விலை புட்டி 1-க்கு ரூ. 2.

என். வி. கோபால் மேடிகல் ஹால்,
27, வெங்கடேச மேஸ்திரி வீதி, கிருஷ்ணுங்குளம், மதராஸ்.



புதிதாய் ஏற்படுத்தப்பட்டது! புதிதாய் ஏற்படுத்தப்பட்டது!!

### விலை சரவலமாகிவிட்டது.

எல்லாவித பட்டு, சரிகை புடவைகள், தாவணிகள், ரவிக்கைகள், பம்பாய், ஜப்பான், சைனு, கராச்சி முதலிய பலவிடங்களிலிருந்து வரவழைக்கப்பட்டிருக்கிறது. இன்னும்மெத்தை விரிப்புகள், ரத்ன ஜமக்காளங்கள், வெல்வெட் ஜமக்காளங்கள், பட்டு படுக்கை ரெக்குகள், வாயல் துணிகளும், சமிக்கிவேலைசெய்த ஜாக்கெட் ரவிக்கை, குழந்தை சொக்காய்களும், தயாராகவிருக்கின்றன. ஷர்ட் துணிகள், கோட் துணிகள், இங்கிலீஷ் ட்வில் பெங்களூர் புடவை மாதிரி, காஞ்சி புடவைகளும் தயாராகவிருக்கின்றன.

எங்கள் கம்பெனியில் தயவுசெய்து ஒரு முறை வாங்கிப் பாருங்கள்.

எச். கங்காராம்,
பட்டு வியாபாரம், கல்லுக்கட்டி, காரைக்குடி.
ஹெட் ஆபீஸ்:—247, சைனு பஜார் ரோட், மதராஸ்.



### அலங்கார மாளிகை!

கண்காட்சி! மனோரம்யம்!!

உங்கள் மாளிகைகளையும், பங்களாக்களையும் அழகாய் அமைக்க விரும்பினுல், எங்களிடம் கிடைக்கும் (மார்பில் ஸ்டோன்ஸ்) பளிங்குக் கற்களையே உபயோகியுங்கள்.

எங்களிடம் பலவித பளிங்குக் கற்களும், பலவித பூப்போட்ட கற்களும், சுவற்றிற் பதிக்கக்கூடிய புது புது மாதிரி ரேக்குக் கற்களும், பலவித அழகிய பார்டர்களும், சானிட்டரி சம்பந்தமான ஸ்நானத் தொட்டி, முகங்கழுவுந் தொட்டி, லாட்டரின் தொட்டி வகைகளும், மார்பிள் கல்லினுல் செய்த பலவித லீலா விநோத உருவச்சிலைகளும், ஹிந்து விக்கிரகங்களும், 6x3 படுக்கைக் கற்களும், மணமக்கள் உட்காரும் மணைகளும் சகாய விலைக்குக் கிடைக்கும்.

லெக்ஷ்மீரதன்ஸ் (லிமிடெட்.)
GENERAL MERCHANTS & COMMISSION AGENTS,
316, தம்பு செட்டித்தெரு, மதராஸ்.
P. B. No. 20. TEL. "LUX"



13-ம் வருடம் பிறந்துவிட்டது. 13-ம் வருடம் பிறந்துவிட்டது.

### "ஆனந்தபோதினி."

ஓர் உயர்தர தமிழ் மாதப் பத்திரிகை.
48 பக்கங்களில் உயர்ந்த வியாசங்களுடன் வெளிவருவது.
தமிழ் நாட்டில் உள்ள மாத சஞ்சிகைகளில் முதன்மை பெற்றது.
13 வருடங்களாக நடைபெற்று வருவது
20,000 சந்தாதாரர்களையுடையது. எல்லோரும் படிக்கத்தக்கது.
இந்தியா, பர்மா, சிலோன் ஆகிய உள் நாடுகளுக்கு வருட சந்தா ரூ. 1-0-0.
பினங், சிங்கப்பூர், நெட்டால் முதலிய வெளி நாடுகளுக்கு
வருட சந்தா ரூபா 1—4—0 மாதிரிக் காப்பி இனும்.
விலாசம்:—ஆனந்தபோதினி ஆபீஸ்,
நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.




## ருஷிய விபத்து.

"பீபிள்" பத்திரிகையில் கீழ்க்காணும் குறிப்பு காணப்படுகின்றது:—

ருஷியாவுக்கும் ஆங்கில நாட்டுக்கும் இடையே இருந்த சமாதான உறவு முறிந்து போய்விட்டது. இதன் விளைவு என்ன? ருஷியாவுக்கு விரோதமாகவும் ஆங்கில நாட்டுக்கு விரோதமாகவும், பல வகைப்பட்ட கொடிய நிகழ்ச்சிகள் பரஸ்பரமாக, உலகத்தில் பலவிடங்களில் நேர்ந்து வருகின்றன. மிக பயங்கரமான போர்க்கருவிகளும் ஆகாய விமானங்களும் இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் இப்பொழுது ஏராளமாகச் சேர்த்து வைக்கப்பட்டு வருகின்றன என்பது யாவரும் அறிந்த விஷயமேயாகும். காஷ்மீர தேசத்துப்புதிய மகாராஜாவுடன் களித்து உறவாட, சமீபத்தில் வைஸிராய் அவர்கள் சென்றிருந்தார். காஷ்மீரத்துக்குமட்டுமல்ல, பலுசிஸ்தானத்துக்கும் வைஸிராய் சென்றிருந்தார். மேலும் இந்தியாவின் சேனுபதி, தமது சமீபத்தில் நடைபெற்ற பிரசங்கங்களில்சிலகுறிப்புகளை வெளியிட்டார். மேற்கூறிய நிகழ்ச்சிகளைத் திரட்டிப் பார்த்தால், அவைகளுக்கு சிறப்பாகப் பொருள் உண்டு என்று கொள்ளலாம்.

வேற்று நாட்டுடன் ருஷியா போருக்குச் சென்ருல், ஆப்கானிஸ்தானம் ருஷியாவுக்கு உதவி செய்ய வேண்டும் என்று ஒரு உடன்படிக்கை இரண்டு நாடுகளுக்குமிடையே இருக்கிறது. ஆப்கன் நாட்டு ஆகாயப்படைகள் ருஷியர்களின் உதவியைக் கொண்டு, ருஷிய நிபுணர்களால் அரண் செய்யப்பட்டு வருகின்றன. ஆங்கில நாட்டுடன் ருஷியா போருக்குச் சென்று, ஆப்கானிஸ்தானமும் ருஷியாவுக்கு உதவி செய்யுமாகில், அதாவது இந்தியாவின் எல்லைப்புறப் பிராந்தியங்களைத்தாக்க ஆப்கானிஸ்தானத்துக்குச் சந்தர்ப்பம் நேருமாகில், அந்த நிலைமையினின்றும் சமாளித்துக் கொள்ள ஆங்கிலேயர்களால் முடியாது.

இந்தியாவின் எல்லைப்புறங்களில் வசிக்கும் ஜனங்களுக்கு ஆங்கில ஆட்சியின் பேரில் எள்ளளவும் அன்புகிடையாது. இந்திய அரசாங்கத்தின்ராணுவ பலத்தைக்கொண்டு, அவர்கள் அடக்கி வைக்கப்பட்டிருக்கிருர்கள். தனியே போராடினுல், ஆப்கானிஸ்தானமாவது எல்லைப்புற ஜனங்களாவது, இந்தியாவிலிருக்கும் சேனைகளை எதிர்த்து வெற்றியைப் பெற முடியாது என்று ஆங்கில ராணுவ நிபுணர்களுக்கு நன்கு தெரியும். ஆனுல் ருஷியாவும் ஏனைய வல்லரசுகளும் ஆப்கானிஸ்தானத்துக்கு உதவி செய்தால், நிலைமை மிகவும் நெருக்கடியாகி விடும் என்று சொல்லத் தேவையில்லை.

அன்னிய நாடுகளின் தாக்குதலினின்றும் இந்தியாவைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு தங்களிடம் (கடவுளால்) ஒப்படைக்கப்பட்டிருக்கிறது என்று ஆங்கில அதிகாரிகள் கருதுகின்ருர்கள். தேசத்தின் பாதுகாப்பை ஏற்கக் கூடியபடிக்கு,இந்தியர்களை ஆயுதம் தாங்குமாறு செய்வதே சாலச்சிறந்த வழியாகும்.இந்தியாவின் எல்லைப்புறத்தில், ருஷியாவுக்கும் ஆங்கில நாட்டுக்கும் போராட்டம் ஏற்படுமாகில், ஆங்கில நாட்டுடன் சேருவதுதான் தங்கள் நலனுக்கு ஏற்றதாகும் என்று இந்தியப் பொது ஜனங்கள் எண்ணக் கூடிய முறையில், தங்கள் ராணுவ, அரசியல் முறைகளை ஆங்கில அதிகாரிகள் மாற்றிக்கொள்ளுவார்களா?

## நகைப்புக் கூட்டாளி.

பில்லி மெர்ஸன் என்பார் "டிட் பிட்ஸ்" பத்திரிகையில் எழுதியது.

நகையுங்கள்; உங்கள் மனைவியும் உங்களுடன் கூட நகைப்பாள். முகத்தைச் சுளித்துக்கொள்ளுங்கள்; உங்கள் மனைவியும் தனது முகத்தையும் சுளித்துக்கொள்ளுவாள். உங்கள் இல்லறம் நேரே நடவாமல், மணத்தின் பயன் ஏற்படாமற்போனுல், அதற்கு நீங்களே பொறுப்பாளியாவீர்கள். நானும், எனது மனைவியும் சென்ற இருபத்திரண்டாண்டுகளாக சிரித்துக்கொண்டிருக்கிருேம். எங்கள் சிரிப்பு இன்னும் முடிவடையவில்லை. எங்கள் நகைப்பின் விளைவு என்ன தெரியுமா? நாங்கள் எங்கள் கலியாண காலத்தில் இருந்ததைக் காட்டிலும், அதிகமான காதலுடன் வாழ்கின்ருேம்.

எங்கள் மணவாழ்க்கையைத் துவக்கிய காலத்தில், நாங்கள் மிகப் பெரிய நகைப்புடன் துவக்கினேம். நாட்டிங்காம் என்ற ஊரில், நான் ஒரு வீடு வாங்கினேன். யாதொரு சிறிய விபரத்தையும் அசட்டை செய்யாமல், வீட்டிற்கு வேண்டிய எல்லாச் சாமான்களையும் தயார் செய்துவைத்தேன். வீட்டுக்கு வரும்படியாக, எனது மனைவிக்குத் தந்தி கொடுத்தேன். அவள் வந்து சேருமுன்னர், வீட்டில் எல்லாம் சரியாயிருக்கின்றதா என்று எல்லாவற்றையும் பரிசீலனை செய்துபார்த்தேன். ஒவ்வொரு சாமானும் அதன் இடத்தில் இருக்கிறதா என்று சரிபார்த்தேன். என்னுடைய கவனத்துக்கு எதுவும் தப்பிப்போகவில்லை. காரியத்தை ஒழுங்காகச் செய்தவனுக்கு ஒருவித உள்ளப் பூரிப்பு ஏற்படுமல்லவா! அத்தகைய உள்ளப் பூரிப்புடன், ராணிக்கேற்ற நல்விருந்தை எனது மனைவிக்காகத் தயாராக வைத்திருக்குமாறும் செய்தேன்.

### பால் வழி.

எனது மனைவி வந்தாள். மிகுந்த கர்வத்துடன், வீட்டிலழைத்து, அவளுக்கு எல்லாவற்றையும் காண்பித்தேன். கடைசியில், நாங்கள் இருவரும் சாப்பிட உட்கார்ந்தோம். உணவைப்பற்றி அவளுடைய கருத்தைத் தெரிந்துகொள்ள, நான் மிகுதியும் ஆவலுடனிருந்தேன். கடைசியாக அவள் கூறினதாவது:—

"கண்ணே! எல்லாம் நன்ருகவிருக்கின்றன. எனக்கு வீடு பிடித்துவிட்டது. சாமான்கள் பிடித்துவிட்டன. விருந்தோ, மிக நல்ல விருந்தாகும்; ஆனுல் நீங்கள் உப்பையும் மிளகையும மறந்துவிட்டீர்கள்" நான் மறந்துபோனது உண்மை. முதலில் எனக்குக் கண்ணீர் விடத்தோன்றிற்று. ஆனுல் எனது நகைச்சுவை என்னைக் காப்பாற்றிவிட்டது. நாங்கள் இருவரும் மிகுதியும் நகைத்தோம்.

## மோட்டார்த் தொல்லை.

க-வது மோட்டார்க்காரன்:—வாருமையா! நமது வண்டி உங்கள் ஊருக்குத்தான் போகிறது. இதில் ஏறுங்கள்.

அகப்பட்டுக்கொண்ட ஆள்:—இல்லை, உங்கள் வண்டி போகும் ஊருக்கு நான் போகவில்லை. உண்மையாய்ச் சொல்லுகிறேன்.

உ-வது மோட்டார்க்காரன்:—இப்படி வாரும். ஏனையா 'முழி'க்கிறீர்? நமது வண்டியில் சுறுக்காய் ஏறும். பள்ளத்தூருக்குத்தானே போகிறீர்? ஆமாம்; ஏறும், ஏறும்.

ஆள்:—நான் பள்ளத்தூருக்குப் போகவில்லை. என்னை விடும்.

ந-வது மோட்டார்க்காரன்:—நீர் வாரும்; அவன்கள் கிடக்கிருன்கள். உமது மூட்டை இதோ இருக்கிறது. (ஆளின் தலையிலிருந்த மூட்டையைப் பிடுங்கிக்கொண்டு) வாரும். வாாவிட்டால் மூட்டை கிடையாது; அவ்வளவுதான்.

ஆள்:—ஐயோ! நான் என்ன செய்வது? இந்த மூட்டைக்குள்ளிருக்கும் பழங்களை விற்பதற்காக வந்த என்னை, இங்கும் அங்கும் இழுத்துத் தொல்லைப்படுத்தி, மூட்டையையும் பிடுங்கிக்கொண்டார்களே!

## புயற்காற்று விளைவு.

இந்தக் குறிப்பு "இந்தியன் ஸோஷல் ரிபார்மர்" பத்திரிகையில் காணப்படுகின்றது:—

வட இந்தியாவில் இப்பொழுது ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே இருந்துவரும் பகைமை, இரண்டு கூட்டத்தார்களுக்கும் போவமானமாகும். இது சொல்லாமலே விளங்கும். ஆனுல் இந்தியாவைப் பற்றிக் குறைகூறும் ஆங்கிலேயர்கள் ஒரு சங்கதியை நேரே அறிந்து கொள்ளுவதில்லை. இரு சமூகத்தாரும் சண்டையிட்டுக் கொள்ளுவது இந்திய அரசாங்கத்துக்கும் அவமானமாகும். குடிமக்களுள் ஒற்றுமையை ஏற்படுத்த வேண்டுவது அரசாங்கத்தின் பொறுப்பல்லவா! முப்பது ஆண்டுகளுக்கு முன்னர், இந்தியாவின் ஜாதி, மத வேற்றுமைகளைக் கவனித்து, அவைகளுக்கேற்றவாறு வினையாற்ற, இந்திய அரசாங்கம் உறுதியாக மறுத்துவிட்டது. ஆனுல் அப்பொழுதும் ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் வேற்றுமை பாராட்டப்பட்டது. அரசியல் சம்பந்தப்பட்டவரையில், சமூக வேற்றுமைகள் இல்லாமையினுல், அவைகள் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வந்தன. நாளடைவில், அவைகள் பட்டு ஒழிந்து போயிருக்க வேண்டும். இது நல்ல அரசியல் முறையாகும். ஆனுல் இந்த முறை, வங்காளப்பிரிவினைக்காலத்துக்குப்பின்னர், கைநழுவ விடப்பட்டது.

வங்காளப் பிரிவினை ரத்துக்கிளர்ச்சியினின்றும், அராசகக் கூட்டமொன்று கிளம்பிற்று. இந்தக் கூட்டத்தை அடக்கமுயன்ற அரசாங்கத்தார், இந்தியாவுக்குச் சீர்திருத்தம் வழங்கிய காலத்தில், ஜனங்களின் மத சம்பந்தமான உணர்ச்சிகளுக்கு ஏற்றவாறு, வாக்குரிமை வழங்கினுர்கள். இந்த சீர்திருத்தத்துக்குக் காரணமாயிருந்த வைஸிராய் மிண்டோ பிரபு, அரசியல் நிர்வாகத்தில் அவ்வளவு தேர்ச்சி பெற்றவால்ல. சரித்திர வல்லுனரான மார்லி பிரபு (இந்திய மந்திரி) இதனுல் விளையக்கூடிய பேராபத்தை விரைவில் தெரிந்துகொண்டு, வைஸிராய் அவர்களுக்கு எச்சரிக்கை செய்தார். ஆனுல் வகுப்புவாரி வாக்கு உரிமைக் கொள்கையை வைஸிராய் அவர்கள் பகிரங்கமாக ஏற்றுக்கொண்டு விட்டார். எனவே, இந்திய மந்திரி இது சம்பந்தப்பட்ட வரையில், தமது கைகளைக் கழுவிவிட்டு, வைஸிராய்களுக்கு சட்டப்படி கொடுக்கப்பட்டிருக்கும் சுதந்திரத்தைக் காட்டிலும் அதிகமான சுதந்திரத்தை அவருக்குக் கொடுத்துவிட்டு, இந்திய மந்திரி சும்மாயிருந்துவிட்டார். அது முதல், சமூகக்கேள்வி இந்தியாவில் ஒரு சிறப்பான கேள்வியாக இருந்துவருகின்றது. காங்கிரசை நடத்திவந்த பழைய தலைவர்களின் துணை, காங்கிரசுக்கு இல்லாமற்போகவே, வகுப்புக் கொள்கையை ஆதரிக்கும் சிலர், காங்கிரசைக் கைப்பற்றிக் கொண்டு, எப்படியாயினும், அரசாங்கத்தைக் கவிழ்க்க முயன்ருர்கள். லக்னோ ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்டு மகாத்மா காந்தி ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையை கிலாபத்து, இயக்க மூலமாக வளர்த்து வந்தார். ஆனுல் அந்த ஒற்றுமை சீர்குலைந்து வந்தது என்பதை அவரால் அறிய முடியவில்லை. கமால்பாட்சா, கிலாபத்தை ஒழித்துவிட்டார். எனவே, கிலாபத்து மூலமாய் ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையை நாட்டலாம் என்ற காந்தியின் யோசனை பக்குவப்படவில்லை. நிலையில்லாத ஒற்றுமைக்குப் பின்னர், இரண்டு சமூகத்தாருக்கும் முற்றிய பகைமை ஏற்பட்டது இந்த நெருக்கடியின் விளைவின் மூலமாய் நாம் இப்பொழுது சென்று வருகின்ருேம்.

## நாடகத்தின் : : : : ஆபாசம்.

மேற்கண்ட பெயருடன் "கட்டுரை" ஒன்று வரையவேண்டுமென்ற அவா நான்கைந்து முன்னராகவே எழுந்தது. அதற்கு சந்தர்ப்பம் கிடைக்காதிருந்தும் நாவைதேப்படாதிருந்தும் வாளாவிருந்தனன். இப்பொழுது (மாண்டலேயில்) சிறிதுநீதி காட்டப்பெற்றிருக்கும் உருவப் படங்களும் முன்னறிக்கை நோட்டீஸ்களும் என்னை அடிக்கடி எழுத தூண்டுகின்றன. பொதுவாக மாண்டலேயில் வசிக்கும் தனவைசியர்கள், தனவைசியரல்லாதார் எத்தருமல்லவர்களும் முக்கியமாக கவனிக்க வேண்டுமென்பதுபற்றியே இக்கட்டுரை வரையலானேன். வாசகர்கள் மன்னிப்பார்களாக.

பர்மாவில் நாடகமென்றால் அதிகமதிப்பு. அதிலும் விதூஷகன் தேர்ச்சியடைந்தவனாகவும் சில ஸ்திரீ நடிகர்கள் விசேஷமாகவும் இருந்தால் போதுமானது. சரித்திரம் சரியோ தப்போ, ராகம் லயமோ டெனிக்லேயோ, வசனம் பொருத்தமோ பொருத்தமற்றதோ, வேஷம்கட்டி வெளியில் நிலைய விட்டவேண்டியதுதான். காலோவுக்களுக்கும், அரசர்களுக்கும், சபாக்கட்டாக்களுக்கும், ஒன்மோர்களுக்கும் அளவில்லை. விதூஷகன் வெளிவந்தால் டப்பா, டப்பா, என்ற சப்தம் செவியைத் துளைக்கின்றது. இப்படியே ஆண்டுதோறும் அனேக நாடக கம்பெனிகள் பர்மாவில் விஜயம் செய்து கணக்கற்ற பொருளை வாரிக்கொண்டு போவதுமல்லாமல் இளைஞர்களையும் மோசவலையில் சிக்கும் செய்துநழுவட்டி செய்துவிட்டுப் போகின்றனர்.

இவ்வூருக்கு இரண்டாவது மாண்டலே வென்னலாம் இந் நகருக்கும் ஆண்டுதோறும் நாடகம் காமலில்லை. சிலசமயம் போட்டிகளும் வந்துவிடுகின்றன.

அவை அப்படியிருக்க, இவர்கள் நடத்தும் சரித்திரங்களில் பொருத்தமற்றவையும் குறிக்கவொண்ணாதவையுமுள்ள சரித்திரங்கள்தான் பெரும்பாலும் நடத்தப்படுகின்றது. ஜனங்களுக்கு நல்லபடிப்பினையை கொடுப்பதற்கே நாடகம் ஏற்பட்டது. இவர்கள் அதற்கு முத்தம்மாளுக, ஒட்ட நாடகம், அல்லி அரசாணி, பவழக்கொடி, சாரங்கம், கோவலன், குலேபகாவலி, தாராசங்கம், அநிருத அமாவதி, என்றும் இன்னும் இப்படிச்சொற்ற காமம் ததும்பும், கற்பனைக் கதைகளையும் நாடகரூபமாக நடித்து காண்பிக்கிறார்கள். இதனால் நல்ல படிப்பினையை அறவே ஒழித்து கெட்ட படிப்பினையை கைக்கொள்ள ஹேதுவாக இருக்கிறது. வாலிபர் முன்னேற்றத்தைக் குறித்த நிலைகள் (ஒழுக்கத்தவைகளை) நடித்து காண்பிக்கிறார்கள்.

நாடகக்காரர்களும் யோஜிக்கவேண்டும். பிழைப்புக்காக நடிப்பவர்களாயிருந்தாலும் ஜனசமூகத்தையும் சீர்பெறச் செய்யவேண்டியது முக்கியம். தேச முன்னேற்றத்தைக் கருதி கொஞ்சம் கஷ்டப்பட்டாவது புராண காவியங்களிலுள்ள ருசிகரமான சில பாகத்தை எடுத்துக்கொண்டு இலகுவாய் நடத்தலாம். அதானது புராணங்களிலுள்ள கட்டங்கள் ஒவ்வொன்றும் நன்கு புரியும். இதல்லாது கெட்ட எண்ணங்களை உண்டுபண்ணக் கூடிய (மேலே காட்டியுள்ள) கதைகளை நடித்துக் காண்பிப்பதில் ஜனசமூகத்தையே கெடுத்து தேசத்தை குட்டிச்சுவராக்குவதற் கொப்பாகும். நாடகம் பார்க்கச் செல்லும் நம்வாலிபர்களும் காமம் நிரம்பிய கற்பனைக் கதைகளுக்கு செல்லாது கட்டுப்படுத்தவேண்டும்.

சில ஆண்டுகளுக்கு முன்னதாக மாண்டலேயிலும் இரங்கூனிலும் தனவைசியர் சிலர்களில் சில வாலிபர்களால் பத்தாயிரக்கணக்கான ரூபாய்கள் கையாடப்பட்டு நாடகக் கொட்டகையில், புதைத்துவிட்டதாக இன்னும் குழப்பமாகவிருக்கிறது. இதனால் கண்ணியமாயுள்ள இளைஞர்களையும் (தனவைசிய நிலையங்களில்) சம்சயமாக வைத்து நடத்த யோஜிக்கிறார்கள். இதற்கு காரணம் கெட்ட ஸ்திரீ நடிகர்களை கொண்ட சீர்கெட்ட நாடகமே.

இனிமேலும் நம்மிளைஞர்கள் ஆபாசமான நாடகங்களுக்கு செல்லாது ஒழுக்கமான நாடகங்களை கண்ணுற்று அதில் தவழுகின்ற அருஞ்சுவைகளை அனுபவிப்பார்களென்ற நம்பிக்கையுடன் இக்கட்டுரையை முடிக்கின்றேன் என்று மாண்டலேயிலிருந்து திரு. அரு. சொக்கலிங்கன் எழுதுகிறார்.

## தொழிலின் அவசியம்.

காரைக்குடி ஸ்ரீமான் சா. வெ. செ. செட்டியப்ப செட்டியார் அவர்கள் (௨-௯-௨௭)-ல் மதுரை மீனாக்ஷி டெக்ஸ்டைல் மில் திறப்பு உரையில் விழாவின் பொழுது நிகழ்த்திய பொதுச்சி எடுத்த தொழின் முறை மொழிகளை (௯-௯-௨௭) சுதேசமித்திரனில் கண்டு களிப்புற நேர்ந்தது. உலகில் பலதேசங்களிலும் நாளுக்கு நாள் தொழிலபிவிருத்தி பெருகிக்கொண்டே வருகிறது. அமெரிக்காவில் சராசரி நபர் வருஷ வருமானம் ரூ. ௧௩௫0 ஆக இருக்கையில் இந்தியாவில் சராசரி நபர் வருஷ வருமானம் ரூ. ௩௦ ஆக இருப்பதைக் கவனித்தால் தொழிலில்லாமையினாலேயே இந்தியா இவ்விதஹீன ஸ்திதியிலிருந்து வருகிறதென்பதை சந்தேகமற யாவரும் எளிதில் அறியலாம். இத்தகைய நமது கஷ்டத்தை மாறி உயர்நிலையடையவும், நம்தேச சகோதர ஜனங்களில் பெரும்பாலோர் உண்ண உணவும் உடுக்க உடையுமின்றித் தவிக்கும் பரிதாப நிலைமையைப் போக்கவும் ஒரு வழிதானுண்டு. அதாவது நமது தேவைக்கு வேண்டிய வஸ்துக்களை நாமே தயாரித்துக்கொள்ளத் தகுந்த அநேகவிதமான தொழிற்சாலைகளை நமது நாட்டில் அபரிமிதமாக உடனே ஏற்படுத்தவேண்டும். இதனால் நமது பணம் நமது தேசத்திலேயே தங்குவதின்மூலம் நம்மை நாம் காப்பற்றிக் கொள்ளமுடியும். ஆதலால் நமது தேச ஜனங்களனைவரும் தொழில் நிபுணர்களாகவும், தொழிலாளர்களாகவும், பிரபுக்கள், முதலாளிகள் தனைவரும் தொழில் தலைவர்களாகவும் ஆகவேண்டும்.

தொழிலில் பயிற்சி பெற்ற தொழிலாளர்களாக உள்ளோர் மட்டும் தொழிலியற்றத் துணிதலால் பயனில்லை. முதலாளிகளாக உள்ளோர்கள் தனித்தனியே முற்படுவதும் பயனில்லை. ஆனால் அவர்கள் கூட்டங்கூட்டமாக (கூட்டுறவு பெரும் மூலதன முறையில்) சேர்ந்து ஆங்காங்கு பற்பல தொழில்களை ஆரம்பித்து தொழில் நிபுணர்களையும் தொழிலாளர்களையும் கொண்டு தொழில்களை செவ்வனே நடத்தி வரவேண்டும். தொழிலாளர்களுக்கு தொழிலபிவிருத்தியில் சுதந்திரமும் அக்கரையும் ஏற்படும்படிக்கு முதலாளிகள் தொழிலாளர்களின் ரக்ஷகர்களாகவும் தொழிலாளர்கள் முதலாளிகளின் காப்பாளர்களாகவும் பரஸ்பர நல்லபிமான சம்பந்தமிருக்கவேண்டும்.

இந்தியாவில் பற்பல தொழிற்சாலைகளை ஆரம்பித்து நடத்தத்தகுந்த பிரபுக்களும் முதலாளிகளும் பெரும்பான்மையோரிருந்தும் அவர்களெல்லோரும் அன்னிய தேசப் பொருட்களை வாங்கி விற்பதில் கிடைக்கும் லாபத்தைகொண்டு திருப்தியடைவதிலும் ரொக்கமாக வைத்திருக்கும் பணங்களை தொழில்களில் போட்டால் அந்தப் பணங்களைத் திரும்பவும் உருவாகப்பெற முடியுமோ, அல்லது போய்விடுமோ என்ற சந்தேகமும் அதைரியமுங் கொண்டவர்களாகவும் காலங்கடத்தி வந்ததினால் நமக்குவேண்டிய வஸ்துக்களுக்கு நாம் அன்னியரை எதிர் பார்த்து ஏங்கி நிற்பதோடன்றி நமது பணங்களெல்லாம் அயல்நாடு சேர்ந்து நாம் 'வறுமைப் பிணியிலாழ்ந்து திக்கற்றுத் தவிக்கவுமானது. வட இந்தியர்களைக்காண தென்னிந்தியர்களிலேயே விசேஷமாக இவ்வித சந்தேகமும் அதைரியமும் அதிகமென்பது மிகையாகாது. அதிலும் தனவைசியப் பிரபுக்களிடத்திலோ இந்தக் கொள்கை வேரூன்றிக்கிடக்கின்றது. அவர்களில் தாராள நோக்கமுடையவர்களுமுளர். அவர்கள் கோவில்கள், மடங்களைப் பெருக்கமாகக்கட்டுவதினும், தங்கள் தேவைக்கதிகமான வீடுகளைக் கட்டுவதினும் படாடோப ஆடம்பரச்செலவுகளிலும் தங்கள் பணங்களில் சிலபாகத்தைச் செலவிடுகிறார்கள். அவைகள் ஓர்வகைச்செலவினமென்று ஒப்பலாமே யன்றி, உண்ண உணவும் உடுக்க உடையுமின்றிப் பரிதபிக்கும் இந்தியர்களை மானமாய்க்காலந்தள்ளும்படி தொழில்களை ஸ்தாபித்து அதன் மூலம் போஷிப்பது போன்ற தர்மமாகாது. ஸ்ரீமான் செட்டியப்ப செட்டியார் தொழிலபிவிருத்தி நோக்கமுடையாரென்று கேள்விப்பட்டிருக்கிறேன். (மலாய் நாட்டில் ஈப்போ நகரில் பிரபல பாகங்கள் வர்த்தகம் புரிவதோடு ரப்பர் தொழிற்சாலையொன்று ஏற்படுத்த அதன் மூலம் அநேக சாமான்கள் உற்பத்தி செய்கிறார். இன்னும் அதை பலவழிகளிலும் பெருக்க அபிப்பிராயமுடையோராகயிருப்பதாகவும் கேள்விப்படுகிறேன்) அன்னார் தங்களினத்தார் செய்துவரும் செலவின் தர்மங்களைக்கண்டனஞ் செய்திருப்பது மிகவும் பொருத்தமுடையதே. ஸ்ரீமான் பிச்சப்பா சுப்பிரமணியம் அவர்களும் இன்னுஞ் சிலரும் தற்காலத்திற்கேற்ப தேச முன்னேற்றத் துறையில் உழைத்து வர்தாலும் தனவைசியர்களில் பெரும்பான்மையோர் தேச முன்னேற்றத் துறையில் தொழிலபிவிருத்தியைப்பெருக்க முன்வர வேண்டுமென்றே விரும்புகிறேன்.

(குறிப்பு) நாடார்களால், தூத்துக்குடியிலும், மலையாளிகளால் கொச்சி, கள்ளிக்கோட்டை, பாலக்காடு, முதலான இடங்களிலும் தனித்தனி பாங்குகள் ஏற்படுத்தி நடத்திவரும் பொழுது லேவாதேவித் தொழிலையே தொன்றுதொட்டு கையாண்டு வரும் தனவைசிய மரபினரால் பிரபல பாங்கு ஒன்று இதுவரை ஸ்தாபித்து நடத்தப்பெறாதது பெருங்குறையே யாகும். இக்குறை நீக்கும் பொருட்டு சாற்புரமும் தனவைசிய நாட்டால் சூழப்பெற்றுள்ள வியாபார ஸ்தலமாகிய புதுகோட்டையில் ஒரு பாங்கு யேற்படுத்த சௌகரியத்தையும் நல்ல லாபத்தையும் அடைய தனவைசிய பிரபுக்கள் உடனே முன்வரவேண்டுமென்று விரும்புகின்றேன் என்று (ரேஙூர்வாசி) தொழிலபிமானி சே. அப்துல்கனி அவர்கள் சிங்கப்பூரிலிருந்து எழுதுகிறார்.


# மைசூர்ஜவுளிவர்த்தகசாலை

அம்மன் சந்நிதி வீதி,

**காரைக்குடி.**

**ஏற்றுமதி தினுசுகள்!**

வெளி நாடுகளுக்கு வேண்டிய எட்டு முழம் துயிலி ஜோடிகள், துப்பட்டாக்கள், துயிலி ரகங்கள், பஸ்கானுக்கள் முதலிய எல்லாவித ஜவுளி த்னுசுகளும் தயாரிலிருக்கின்றன.

அவரவர்கள் பெயர் போட்ட எழுத்துப் பேட்டுத் துப்பட்டாக்கள் சல்லிசான விலைக்குத் தயார்த்து அனுப்ப முடியும்.

N. B.—வெளியூர் ஆர்டர்களை அப்போதைக்கப்போது கவனத்துடன் சீக்கிரமாய் அனுப்பப்பெறும்.


## விண்டர்ட்டன் : : : : பொய்கள்.

"பீபிள்" பத்திரிகையில் காணப்படுகிறது.

வங்காள அவசரச் சட்டக்கைதிகளைப் பற்றிப் பார்லிமெண்டு சபையில் கேள்விகள் கேட்கப்பட்டபொழுது, அவர்கள் நீதிபதியின் முன்னர் கொண்டுவரப் பெற்றார்கள் என்று விண்டர்ட்டன் பிரபு (இந்தியாவின் உதவிமந்திரி) கூறியதாக ராய்ட்டர்ச் செய்தி சமீபத்தில் அறிவித்தது. தாம் எந்த நீதிபதியின் முன்னரும் கொண்டுபோகப் பெறவில்லை என்று திரு. சுபாஷ் சந்திரபோஸ் அவர்கள் கூறியதினின்றும், விண்டர்ட்டன் அவர்கள் கூறியது பொய் என்று விளங்கும். இதை போஸ் அவர்கள் தந்திமூலம், ஆங்கில நாட்டுக்கு திரு. ஜியார்ஜ் லான்ஸ்பரி அவர்களுக்கு அறிவித்தார். மீண்டும் இந்த சங்கதியைப்பற்றி பார்லிமெட்டில் பேசப்பெற்றது. எந்தத்தேதியில் சுபாஷ் போஸ் அவர்கள் நீதிபதியின் முன்னர் கொண்டுவரப் பெற்றார் என்றும் அல்லது எப்பொழுது அவருக்கு விரோதமான சாட்சியம் சுபாஷ் அவர்களுக்குக் காண்பிக்கப் பெற்றது என்றும் விண்டர்ட்டன் பிரபு கேட்கப்பட்டார். இதற்கு விண்டர்ட்டன் பிரபுவால் பதில் நேரே சொல்லமுடியாமல், சில தினங்களுக்கு முன்னர் அவர் சொன்னதையே வாபீஸ் வாங்கிக் கொள்ள நேர்ந்தது. தாம் அறிந்தவரையிலும் சுபாஷ் அவர்கள் எந்த நீதி பதியின் முன்கரும் கொண்டுபோகப் படவில்லை என்றும் விரோதமான சாட்சியம் எதுவும் சுபாஷ் அவர்களிடம் காண்பிக்கப் பெறவில்லை என்றும் விண்டர்ட்டன் பிரபு கூறினர். ஜியார்ஜ் லான்ஸ்பரி அவர்கள் தவறாக உணர்ந்திருந்தால், அந்த தவறுக்குத் தமது சொற்கள் காரணம் எனக் கொண்டு தாம் வருந்துவதாக விண்டர்ட்டன் பிரபு கூறினர். யார்பொய் சொன்னர், ராய்ட்டரா, விண்டர்ட்டனா என்று இந்தியாவிலிருக்கும் நமக்குத் தெரியாது. இரண்டுபேர்களில் ஒருவர் பொய் சொல்லியிருக்க வேண்டும்.


**இனிய இன்ப நூல்கள்.**

| | ரூ. | அ. |
|---|---|---|
| சரீரமர்ம சாஸ்திரம் (படத்துடன்) | 1 | 0 |
| இல்லற இன்ப ரகசியம். | 0 | 8 |
| மணவாழ்க்கை மர்மம். | 2 | 4 |
| சதிபதிகளின் மர்மம். | 1 | 0 |
| ஸ்திரி புருஷ ரகசியம். | 1 | 0 |
| இரதி மதன சிருங்காரம். | 0 | 12 |
| மனோவசிய சாஸ்திரம். | 1 | 8 |
| ஜீவவசிய பரம ரகசியம். | 3 | 0 |
| மஹேந்திர ஜாலம். | 0 | 12 |
| மதிமோசக் களஞ்சியம் (2-பாகம்) | 2 | 0 |
| கைத்தொழில் வணிக ரகசியம். | 1 | 8 |
| கவியின் கோலாகலம். | 0 | 12 |
| சீதாலக்ஷிமி. | 1 | 0 |
| மாயா ஜாலம். | 1 | 0 |

சேட்லாக் இனும்.
நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி,
(V) வெங்கட்டராமய்யர் வீதி,
மதராஸ்.

**எஸ். டி. சாரீஸ்.**
சகல மேகரோக படை சங்காரன்
சகலவிதமான படைகளையும் 3வேளை உபயோகத்தில் நிவர்த்திக்கும் நிவர்த்திக்காவிடில் ரூ. 5/-இனும். புட்டி 1க்கு விலை அணா 6. வி. பி. சார்ஜ் தனி 1. டஜன் வாங்குவோருக்கு தபால் சார்ஜ் உள்பட, விலை ரூபாய் 5.
T. சாரீஸ் தேள்மருந்து
டப்பி 1-க்கு விலை அணா 8.
எஸ். டி. சாரி கம்பெனி,
நெ. 11, தேரடித்தெரு, சைனுபஜார்,
மதராஸ்.




## காந்தியடிகளின் சரிதம்.

### அதிகாரத்துடன் ஒரு மல்யுத்தம்.

காந்தியடிகள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

### நான்காம் பாகம்.

அத்தியாயம் ௬.

இப்பொழுது ஆசியா இலாகாவைக் கவனிப்போம். ஜோஹான்ஸ்பர்க் நகரம் ஆசியா இலாகா உத்தியோகஸ்தர்களின் அரணாகும். இவர்கள், இந்தியர்கள், சீனர்கள் முதலியவர்களைப் பாதுகாப்பதேயில்லை. தவிர, அவர்களை நசுக்கிவந்தார்கள். "உரிமையுள்ளவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. உரிமையில்லாதவர்கள் நூறுபவுன் கொடுத்தால் போதுமானது, அவர்கள் திருட்டுத்தனமாக உள்ளே விடப்படுகின்றார்கள். இந்த நிலைமைக்குத் தாங்கள் நிவர்த்தியைத் தேடாவிடின், யார் தேடுவார்கள்" என்ற முறையீடுகளைத்தினந்தோறும்என்னிடம் சொன்னார்கள். அவர்களுடைய உணர்ச்சியில் நானும் கலந்து கொண்டேன். இந்தத் தீமையை அடியோடு என்னால் ஒழிக்க முடியாவிட்டால், திரான்ஸ்வாலில் நான் வசிப்பது வீண்வாழ்க்கையாகும்.

எனவே, நான் சாட்சியம் சேகரிக்கத் துவக்கினேன். போதுமான அளவு சாட்சியம் சேகரித்ததும், போலீஸ் கமிஷனர் அவர்களை நான் போய்ப்பார்த்தேன். அவர் நியாயவான்போல் (என் கண்களிற்) பட்டார். என்னை அலட்சியம் செய்யாமல், நான் சொல்லுவது யாவற்றையும் பொறுமையுடன் கேட்டுக்கொண்டு, என் கைவசம் இருக்கும் சாட்சியம் யாவற்றையும் தமக்குக் காண்பிக்குமாறு என்னைக்கேட்டார். அவர் சாட்சிகளைத் தாமே விசாரணை செய்தார். திருப்தி கொண்டார். கறுப்புமனிதர்கள் குற்றம் சாட்டும் வெள்ளையர்களை வெள்ளைக்கார ஜூரிமார்கள் தென்னாப்பிரிக்காவில் தண்டிக்க மாட்டார்கள்என்று அவருக்குத் தெரியும். "ஆனால் நாம் முயன்று பார்ப்போம். ஜூரிகள் விடுதலை செய்துவிடுவார்கள் என்றஅச்சத்தைக் கொண்டு, இத்தகைய குற்றவாளிகளை சுயேச்சையாய்த் திரிவதற்கு விட்டுவிடுதல் கூடாது. அவர்களை நான் கைது செய்யவேண்டும். எல்லாவித உபாயங்களையும் நான் கையாளுவேன் என்று நான் தங்களுக்கு உறுதி கூறுகின்றேன்" என்று அவர் சொன்னர்.

எனக்கு உறுதி தேவையே இல்லை. எனக்குப் பல உத்தியோகஸ்தர்களின் பேரில் சந்தேகமுண்டு. ஆனல் அவர்களின் பேரில், மறுக்க முடியாத சாட்சியம் என்னிடமில்லை. எனவே, இரண்டுபேர்களின் பேரில் வாரண்டுகள் பிறப்பிக்கப்பட்டன. அவர்களிருவரும் குற்றவாளிகள் என்பதைப்பற்றி எள்ளளவும் என் மனத்தில் சந்தேகமேயில்லை.

இரகசியமாக நான் ஒரு பொழுதும் எதையும் செய்ததில்லை. அனேகமாய்த் தினந்தோறும் நான் போலீஸ் கமிஷனரிடம் போய் வருகின்றேன் என்று பலருக்குத் தெரியும். யார் பேரில் வாரண்டுகள் பிறப்பிக்கப்பட்டனவோ, அவர்களிடம் நல்ல உளவர்கள் இருந்தார்கள். அவர்கள் என் காரியாலயத்தின் பக்கத்தில் திரிந்து கொண்டிருந்து, எனது போக்குவரத்துக்களை உத்தியோகஸ்தர்களுக்குத் தெரிவித்துக் கொண்டு வந்தார்கள். ஆனல் இந்த உத்தியோகஸ்தர்கள் மிகவும் கெட்டவர்கள்; எனவே அவர்களிடம் பல உளவர்கள் இருக்க முடியாது என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்தியர்களும் சீனர்களும் எனக்கு உதவி செய்திராவிடின், அவர்கள் ஒரு பொழுதும் கைதுசெய்யப் பட்டிருக்கமாட்டார்கள்.

இந்த இரண்டுபேர்களில் ஒருவர் ஒளிந்து கொண்டார். அவர் பேரில் நாடு கடத்தும் வாரண்டை போலீஸ் கமிஷனர் பெற்று, அவரைக் கைது செய்து, திரான்ஸ்வாலுக்குக் கொண்டு வந்தார். அவர்கள் விசாரிக்கப்பட்டார்கள். அவர்கள் பேரில் பலமான சாட்சியமிருந்தும், அவர்களில் ஒருவர் ஒளிந்து கொண்டார் என்றது ஜூரிமார்களுக்குத் தெரிந்திருந்தும், அவர்கள் இருவரும் குற்றவாளிகளல்லவென்று தீர்ப்புச் சொல்லப்பட்டு, விடுதலை செய்யப் பெற்றனர்.

நான் மிகுதியும் ஏமாற்றமடைந்தேன். போலீஸ் கமிஷனரும் மிகுதியும் வருந்தினர். வக்கீல் தொழிலில் எனக்கு வெறுப்புண்டாயிற்று. குற்றத்தை மறைப்பதற்கும் உபயோகப்படுத்தப் பெறும் அறிவைப்பற்றி நொந்து கொண்டேன்.

என்றாலும் இந்த இரண்டு பேர்களின் குற்றம் மிகவும் தெளிவாகத் தோன்றினமையால், அவர்கள் விடுதலை பெற்ற போதிலும், அரசாங்கத்தார் அவர்களை ஆதரிக்க முடியவில்லை. அவர்களிருவரும் கண்டிக்கப்பட்டார்கள். ஆசியா இலாகாவும் சிறிது திருத்தமடைந்தது. இந்தியர்களுக்கும் சிறிது நம்பிக்கை உண்டாயிற்று.

இந்த நிகழ்ச்சியினால், எனது கீர்த்தி வளர்ந்தது. எனது தொழிலிலும் எனக்குச் செழுமை உண்டாயிற்று. மாதந்தோறும் வீணாகஇந்தியர்களால் செலவழிக்கப் பெற்றுவந்த நூறு பவுன்களிற் பெரும்பான்மை மிகுதிப்பட்டது. எல்லாவற்றையும் மிச்சப்படுத்த முடியவில்லை. ஏனெனின் அயோக்கியர்கள் இன்னும் தங்கள் தொழிலை நடத்தி வந்தார்கள். ஆனல் யோக்கியர்களுக்குத் தங்கள் நல்ல தனத்தைக் காப்பாற்றிக்கொள்ள இப்பொழுது சாத்தியமாயிற்று.

இந்த உத்தியோகஸ்தர்கள் மிகுதியும் கெட்டவர்களாயிருந்தபோதிலும், தனி முறையில் அவர்களின் பேரில் எனக்கு யாதொரு பகைமையுமில்லை என்று என்னால் சொல்லமுடியும். இது அவர்களுக்கும் தெரியும். அவர்களுடைய கஷ்டகாலத்தில், அவர்கள் என்னிடம் வந்தார்கள். நான் அவர்களுக்கு உதவி செய்தேன். நான் எதிர்க்காமலிருக்கும் பட்சத்தில், அவர்களுக்கு ஜொஹான்ஸ்பர்க் நகரசபையில் வேலை கிடைக்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. இது சம்பந்தமாக, அவர்களுடைய நண்பர் ஒருவர் என்னைக் கண்டார். நான் எதிர்க்கவில்லை என்று ஒப்புக்கொண்டேன். அவர்களுக்கு வேலை கிடைத்தது.

நான் கொண்டிருந்த இத்தகைய மனப்பான்மையால், நான் பழகிவந்த உத்தியோகஸ்தர்களின் மனத்தில் அமைதி உண்டாயிற்று. அவர்கள் நிர்வாகம் செய்துவரும் இலாகாவைத் தாக்கி, கடுமொழிகளை நான் உபயோகித்தாலும், அவர்கள் என்னிடம் நட்புடனிருந்தார்கள். இத்தகைய நடத்தை எனது இயற்கையின் ஒருபகுதி என்று அப்பொழுது நான் கண்டு கொள்ளவில்லை. அது சத்தியாக்கிரகத்தின் சிறப்பான பகுதி யென்றும் அது அஹிம்சையின் இலட்சணமென்றும் பின்னர் நான் தெரிந்துகொண்டேன்.

மனிதனும் அவனது செயல்களும் தனித்த இரண்டு சங்கதிகள். நல்ல செயலை ஆதரிக்கலாம். கெட்டதைக் கண்டிக்கலாம். ஆனல் செயலைச் செய்பவன் அவன் செயலுக்குத் தக்கபடி, மரியாதைக்கோ, அனுதாபத்துக்கோ உரியவனுகின்றான். 'பாபத்தின் பேரில் பகைமை கொள்ளுங்கள். ஆனல் பாபியைப் பகைக்காதீர்கள்" என்ற உண்மையை எளிதிலே அறிந்துகொள்ளலாம். ஆனல்அதை அனுபவத்தில், எளிதில் கொண்டுவர முடியாது. இதனாலே தான், பகைமை விஷம் உலகத்தில் பரவி வருகின்றது.

உண்மையைநாடுவதற்கான முயற்சிக்கு, இந்த அஹிம்சைதான் அடித்தளமாகும். அஹிம்சை என்ற அடித்தளத்தைக் கொண்டு, உண்மையை நாடினலன்றி, முயற்சி பயன்படாது என்பதை ஒவ்வொரு நாளும் நான்உணர்ந்து வருகின்றேன். ஒருமுறையைஎதிர்த்துத் தாக்குவது சரியான காரியம் தான்; ஆனல் கெட்டமுறையைக் கை யாளுபவனைத் தாக்குவது, தன்னையே தாக்கிக் கொள்வதாக முடியும். ஏனெனின் நாம்அனைவரும்ஒரு புருஷனால் வர்ணம் பூசப் பட்டிருக்கிறோம்; எனறும் ஒரே கடவுளின் குழந்தைகள். எனவேநமக்குள்ளிருக்கும் தெய்விக சக்திகள் அனந்தமாகும். மனிதர்களில் எவரையும் அலட்சியம் செய்வது, அந்த தெய்விக சக்திகளை அவமதிப்பதாகும். இவ்வாறு செய்வதால், தனக்குமட்டுமல்ல, உலகமனைத்துக்கும் தீமை நேரும்.

## அரசாங்கத்தின் அச்சம்.

காங்கிரஸ் :—சீனவில் குழப்பமாயிருக்கிறது. ஆயிரக்கணக்கானவர்கள் போர்க்களத்தில் காயமுறுகின்றனர். சீனவுக்கும் இந்தியாவுக்கும் சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு அதிகமாக, அறிவு சம்பந்தமான தொடர்பு இருந்து வருகின்றது. எனவே, இந்தியா இந்த சமயத்தில் சீனவுக்கு உதவிசெய்யவேண்டும். வைத்தியக் கூட்டமொன்று இங்கிருந்து சீனவுக்குப் போகுமாறு அனுமதி கொடுங்கள். பண உதவி அரசாங்கத்தார் செய்யவேண்டாம்.

இந்திய அரசாங்கத்தார் :—உண்மை. ஆனல் "அறிவுத் தொடர்பு" என்பதுதான் எங்களுக்கு விளங்கவில்லை. இந்திய வைத்தியக்கூட்டம் சீனவுக்குப் போகவேண்டும் என்று நீங்கள் கூறுவது எங்களுக்கு விளங்கவில்லை. இதனல் பின்னர் என்ன நேரிடுமோ, யார் கண்டார்?

வீட்டிற்கு ஒரு விருந்தாளி வந்திருந்தார். வீட்டிலுள்ள குழந்தைகளிடமெல்லாம் அவர் வெகு பிரியமாய் நடந்துகொண்டார். வீட்டுக் குழந்தைகள் யாவரிலும் கடையவளான முத்தம்மாள் தனது சிலேட்டை எடுத்து வைத்துக்கொண்டு, "மாமா! உன் மாதிரி நான் ஒரு படம் எழுதப்போகிறேன்" என்று விருந்தாளியிடம் கூறினள். எல்லாரும் சந்தோஷமாய் அவளைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். கொஞ்சநேரம் வரை எதோ வரைந்துகொண்டிருந்த அவள், "ஊம் நன்றாயில்லை—ஆனல், அதற்கு ஒரு வால் வைத்துவிட்டால் நல்ல படமாய்ப் போய்விடும்" என்றாள்.

பொருள் அடக்கம்.


| | |
|---|---|
| [illegible]ர்மணம்:— கம்பரும் பெண்மையும். | க |
| வாரக்கடிதம். | உ, ௩ |
| பெண்ணுரிமை (பாட்டு) | ௩ |
| தலுக்குகள். | ” |
| விநோதக் கொத்து. | ௪ |
| குஷிய விபத்து. | ௫ |
| கைப்புக் கட்டாளி. | ” |
| புயற்காற்று வினவு. | ” |
| மோட்டார்த் தொல்லை. (படம்) | ” |
| நாடகத்தின் ஆபாசம். | ௬ |
| தொழிலின் அவசியம். | ” |
| விண்டர்ட்டன் பொய்கள். | ” |
| கார்த்தியடிகள் சரிதம். | எ |
| அரசாங்கத்தின் அச்சம். (படம்) | ” |
| தலையங்கம் :—பெயர்மட்டு மன்று. | அ |
| இடி முழக்கம். | அ, ௯ |
| உள்ளூர். | ” |
| கடிதங்கள். | ௧௦ |
| கப்பல். | ” |


மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற்கொண்டேன்.


ஊழியன் காரைக்குடி
பிரபவ-௵ ஆடி-௬- ௨-௨


# பெயர்மட்டு மன்று.

“பார்ப்பனரல்லாதார் என்ற பெயரைப் பிறப்பினுல் வகுப்பு இல்லை யென்ற கூட்டத்தார் கொள்தல் ஆகாது என்று நாம் பல முறை எழுதி யதை அன்பர்கள் அறிவார்கள். பிறப்பு வகுப்பை உடன்படா எவ்வறிஞரும் பிறப்புப்பற்றிய எப்பெயரையும் கொள்ளமாட்டார்; கொள்தல் ஆகாது என்பதை விவாத முறையில் யாரே மறுக்கவல்லார்? இதுகாறும் அவ்வாறு எவரும் மறுக்கவுங் கண்டோமில்லை. இதுபற்றி நம்முடன் நமது அன்பர் பலப்பலர் விவாதித்திருக்கின்றனர். இக்கூற்றை மறுத்து வென்றார் ஒருவருமிலர்என்பது அவரனைவர்க்குந் தெரியும். “நீங்கள் கூறுவது நியாயந்தான்” என ஒத்துக் கொள்கிறார். பிறகு ஆனுல் என்று, ஆரம்பித்து சிலபலர் செய்கொடுமைக்காற்றாது எழுந்த பேருணர்ச்சி காரணமாக அல்லாதார்ப் பெயரை விடலாகாது எனக் கூறுகின்றனர். அக்கொடுமைகளை ஒழிக்க வேண்டுமென்பதில் நாம் மாறுபட்ட கருத்துடையே மல்லோம். அவரைப்போல் அக் கொள்கைகளை ஒழிப்பதற்கு அல்லாதார்ப் பெயரே அவசியம் என நாம் கருதுகின்றோமில்லை. அங்ஙனம் கருத அவசியம் இல்லையென நாம் உணர்கின்றோம். அது நிற்க,

சிலர் “பெயரில் என்ன இருக்கிறது; பெயர் எப்படி யிருந்தால் என்ன” எனப் பேசுகின்றார். பொருள் பெறு முறையில் பெயர் பல இவ்வுலகில் நிலவுவது உண்மைதான். அம்முறையில் பார்த்தால் பெயர்ப் பொருளை நோக்க வேண்டுவதில்லை யென்பது உண்மையே. அவ்வாறனுல் “பெயரில் என்ன இருக்கிறது?” என்பார் எப்பெயரையும் பொருளாக எடுத்துக் கொண்டு வருந்த வேண்டுவதில்லையன்றோ? தங்களைச் சூத்திரன் என்று பிறர் அழைப்பதற்கு ஏன் வருந்துதல் வேண்டும்? பெயரில் ஒன்றுமில்லையென்று கருதுவார் தங்களைச் சூத்திரர் என்றே, சுருங்கிய எழுத்துக்கொண்ட பெயரால் அழைத்துக் கொள்ளலாமன்றோ? பெயரில் என்ன இருக்கிறது என்று கூறுவது தவறு. பெயரில் என்ன இல்லையென்று நாம் கேட்கின்றோம். பொருளிலா நிலையில் பிற பெயர்கள் யாண்டும் அமைந்திருக்குமானுல் அவை ஈண்டு மேற்கோளன்று. அங்ஙனம் இருப்பன யாவும் பிழையே. பெயரில் எல்லாம் உண்டு. எந்த இயக்கத்திற்கும் பெயர், செவ்விதாக—பொருட்பொலிவுள்ளதாக—அவ் இயக்கக் கொள்கையை அது தெள்ளிதிற் தெரிவிப்பதாக—அதன் கொள்கைக்கு முரணுகாததாக அமைக்க வேண்டுவது இன்றியமையாதது, இவற்றில் வழுவி—எது தங்கொள்கையில் மிக முக்கியமோ, அதற்கே முரணுக அவ் இயக்கப் பெயரை அமைத்துக் கொண்டு, அக் கொள்கை பற்றும் எவரும் பெயரின் இழிவை எடுத்துரைத்தால் பெயரில் என்ன இருக்கிறது என்று கூறுதல் எந்த விவாத முறை பற்றியது என்பதை நம்மால் அறிந்து கொள்ள முடியவில்லை. பெயரில் ஒன்றுமில்லையென்றுல் இன்னே பொருளிலாப் பெயரை எடுத்தெறிந்து விட்டுப் பொருள் பெற்ற பெயரை வைப்பதில் ஏன் தாமதம்?

பிறப்பினுல் வகுப்புக் கூறுவதை அழித்தொழிக்க வேண்டும் என்னும் கொள்கையுடைய அன்பர் பலர் தங்களைப் பார்ப்பான் என்றோ, அல்லாதான்என்றோ, பிறன் என்றோ கூறிக் கொள்ள விரும்பாதிருக்கின்றார். அப்பெயர்கள் தாங்கிய இயக்கங்களில்சேர அவருக்குஎண்ணமில்லை. அல்லாதார்ப் பெயரிய இயக்கம், அக்கொள்கையையே கொண்டுளவேல், கொள்கையில் வேற்றுமையில்லா அவர்சேர்க்கையை ஏன் இழத்தல் வேண்டும்? கொள்கை முக்கியமானுல் அவர் அப்பெயரை விடப் பின் வாங்கலாகாது. தவிர, பெயரில் என்ன இருக்கிறது என்று பேசுவது எவ்வாற்றானும் பொருத்தமின்று. பெயர் மட்டுமன்று, இப்பெயரைப்பற்றிக் கொண்டிருக்கிறது பின்னே பல. பிறப்பு வகுப்பை உடன்பட்ட செயல் பல அவ்வியக்கத்திற்குக் கொள்கைகளாக இருக்கின்றன. அல்லாதார் இயக்கம் பிறப்பு ஒன்று கொண்டே ஒரு கூட்டத்தாரை ஒதுக்கித் தள்ளுகிறது; பிறப்புக்கு ஒரு தன்மை கொடுத்து பிறப்பினுல் பார்ப்பார் என்று ஒரு வகுப்பாரை வெறுக்கின்றது; பிறப்பு வகுப்பைத் துணையாகக் கொண்டு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் வேண்டுகிறது; இன்னோன்ன கொள்கைகள் பிறப்பினுல் வகுப்பு உண்டு என்பதை ஒப்புக்கொள்வனவா அன்று என்று அன்பர்கள் அறிவு கொண்டு ஆராய்வாராக! இன்ன பல வேற்றுமைகொண்ட அல்லாதார்ப் பெயர் இயக்கத்தில் பிறப்பினுல் வகுப்பு என்பதை அறவே தொலைக்க வேண்டுமென்ற கொள்கையை உண்மையிற்கொண்ட அறிஞர் எவ்வாறு சேரமுடியும்? வீணுகப்பெயரில் என்ன இருக்கிறது என்று சொல்லிவிட்டால் போதுமா? பெயரிலும் இருக்கிறது எல்லாம், ஆனுல் பெயர் மட்டுமன்று; பொருள் பல வேற்றுமையிருக்கிறது என்பதை எத்துணையோமுறை எழுதியிருந்தபோதிலும் இன்றும் எழுதுகிறோம். அன்பர்கள் நமது கூற்றை அறிவுகொண்டு பகுத்தறிய வேண்டுமென்பதே நமது பேராசை.

நமக்குப் பொருளிலாச் சாதிப்பெயர் வேண்டுவதில்லை. எந்த சாதியாராக வேண்டுமானுலும் இருக்கட்டும். நமது கொள்கை பற்றுபவரெல்லாம் நமது தோழர்கள். பார்ப்பார் என்று பகர்ந்துகொள்வோரானுலும், அன்றி அல்லாதார் என்று அறைந்துக்கொள்வோரானுலும் அவ்விருவரையும் அப்பெயர் கொண்டு நாம் நோக்கப்போவதில்லை. அவரவர் செயல் கொண்டு தான் நாம் பார்ப்போம். பார்ப்பார் அயோக்கியர் என்றும் சூழ்ச்சிக்காரர் என்றும் கூறித் திரியும் அல்லாதார் என்போரில், எவரும் செய்ய முடியாத அயோக்கியத்தனமும் சூழ்ச்சியும் செய்வார் உளரா இலரா என்று தத்தம் நெஞ்சிற் கையை வைத்துப் பார்க்கும்படி இந்நாட்டு அன்பர்களை வேண்டுவோம். வீண் பகட்டால் உலகத்தை எவரெவர் ஏமாற்றிவருகிறரோ, அவர் அல்லாதவராயினும் உள்ளவராயினும் அவர் தன்மையை உணர்ந்து கண்டிக்குங் கடமையை மக்கள் பூண்டுவிட்டால் எல்லாம் ஒழுங்குக்கு வந்துவிடும். பிறர் பிறழ உணர்த்துவதை மக்கள் நம்புதலாகாது. உண்மை கண்டொழுகுதலே அறிவுடைமை.

# இடி முழக்கம்.

## நொண்டிச் சமாதானம்.

சென்னை பச்சையப்பன் கல்லூரியில், ஆதித்திராவிடர்களைச் சேர்க்கலாமா என்ற கேள்வியைப்பற்றி, அதன் தரும கர்த்தர்கள் கலந்து யோசித்தார்கள். ஆதித்திராவிடர்களைச் சேர்க்க அனுமதி தரப்படல் கூடாது என்று பெரும்பான்மையில், தருமகர்த்தர்கள் முடிவு செய்துவிட்டதாகக் கூறப்படுகின்றது. முடிவு தவறு என்பதைப் பற்றி வாதம்செய்யவே வேண்டாம். ஹிந்து என்ற சொல்லில், ஆதித்திராவிடர்களும் அடங்கியவர்களா என்பதைப்பற்றித் தீர்ப்புச்சொல்ல, சென்னை ஹைக்கோர்ட்டில் பிரச்னை இருப்பதால், அதைப்பற்றி தருமகர்த்தர்கள் முடிவு கூறுவது சட்டப்படி பொறுத்தமுள்ளதல்ல என்று தருமகர்த்தர்களில் ஒருவர் நொண்டிச் சமாதானம் கூறியிருக்கிறார். ஹிந்து என்ற சொல்லுக்குப் பொருள்கூறும் உரிமையும் தகுதியும் யாருக்கு, இப்பொழுது உண்டு என்று நமக்குத் தெரியவில்லை. கிருஸ்தவம், இஸ்லாமைப் போல, ஹிந்துமதம் என்பது அதை ஆக்கியோரின் பெயரால் நிலைபெற்றிருக்கவுமில்லை; அழைக்கப்படுவதுமில்லை என்று திரு. விபினசந்திரபாலர் கூறுகின்றார். “ஆறுகள் கடலில் போய் கலப்பது போல, எல்லா மதத்தினரின் தோத்திரங்களும் கடவுளைப் போய்ச் சேருகின்றன” என்ற உண்மையைக் கண்டவர்கள், போதிப்பவர்கள், ஏற்றுக் கொள்ளுபவர்கள்,யாவரும் ஹிந்துக்கள். இந்தத் துறையிலேதான் ஹிந்து மதத்தின் பெருமை அடங்கியுள்ளது என்று பெரியார்கள் கூறுகின்றார்கள். எனவே, ஆதித்திராவிடர்களைச் சேர்த்துக்கொள்ள மனமில்லாதவர்கள், பிறர்பேரில் பழிசுமத்தப் பார்ப்பது தகாத செயலாகும்.

## நேரான வாதமல்ல.

வில்லியம் ஆர்ச்சர் என்பவர் கீர்த்திவாய்ந்த ஆங்கில நாடகாசிரியர். அவர் காலஞ்சென்று சில ஆண்டுகளாய் விட்டன. அவர் இந்தியாவுக்குவந்து, நமது நாட்டையும் நாகரிகத்தையும்பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார். உயர்ந்த நாகரிகப் போக்குக்கொண்ட ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆளுவது சரி யென்று அந்த நூலில் அவர் தெளிவாகக் கூறியிருக்கிறார். அந்த நூலுக்கு பெர்னர்டுஷா அவர்கள்—இவர் உலகக் கீர்த்திபெற்ற ஆங்கில நாடகாசிரியர்—ஒரு முன்னுரை எழுதியிருக்கிறார். ஆர்ச்சர் அவர்கள் செய்த தீர்ப்பைத் தாக்கி, பெர்னர்டுஷா முன்னுரை எழுதியிருக்கிறார். உயர்ந்த நாகரிகம் என்று எதைக் கூறுவது என்பதுதான் கடினமான வேலையாகும். பெர்னர்டுஷா அவர்கள் உலகம் போற்றும் அறிவாளி. அவர் சந்தர்ப்பங்களின் சூழ்ச்சியால், உடல் வலிமை கொண்ட ஒருஅயோக்கியனுல் பிடிக்கப்பட்டு, தனிவீடொன்றில் காவலில் வைக்கப்படுகின்றார் என்று வைத்துக் கொள்ளுவோம். உடல் வலிமைகொண்ட போக்கிரி தம்மைவிட உயர்ந்தவன்தான் என்று பெர்னர்டுஷா அவர்கள் ஒப்புக்கொள்ளுவாரா? உலக சமாதானத்தைப் பெரிதும் விரும்பி, போரை அறவே வெறுக்கும் பெர்னர்டுஷா அவர்களுக்கு உயர்ந்த நாகரிகம் யாது என்று தெரியாதா? ஆர்ச்சர் அவர்களுக்கு தாம் ஆருயிர்த் தோழன் என்ற முறையில், நேரானவாதத்தைக்கூடவா, ஷா அவர்கள் மறந்து போகவேண்டும்?

## நல்ல செய்தி.

இந்தியாவிலிருக்கும் பல்கலைக் கழகங்களை ஒட்டி, தனித்து மாணவர் படைகள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. சென்னை சர்வகலாசாலைக்கும் மாணவர் படையுண்டு. கல்கத்தாவிலும் ஒன்று இருக்கிறது. தேசத்தின் தற்காப்புக்காக—உலகம் இப்பொழுது இருக்கும் நிலையில்—சேனை அவசியம் இருத்தல் வேண்டும். அதுவும் படித்தவர்கள் ராணுவப் பயிற்சி பெறுவர்களானுல், அவர்களுடைய கல்வி பக்குவம்பெற்று, பூர்த்தியடைந்து விட்டது என்று கூறத்தகுதி பெற்றதாகும். கல்கத்தா படைக்கு, கல்வி இலாகா தலைவரே தளகர்த்தர் என்ற செய்தியைக் கேட்டு, நாம் மகிழ்வெய்துகின்றோம். சேனையும், குரு சிடர்கள் என்ற அன்பின் முறையில் அமையப்பெறுமாகில், அதனுல் நாட்டுக்கு நல்விளைவுண்டு. படித்தவர்களுக்குத் தலைமை வகிக்க, ராணுவப்பயிற்சிமட்டும் கொண்ட கல்விப் பெருக்கு அதிகமில்லாதவர் தனை நியமிப்பது கூடாத காரியமாகும். மலர்களின் அருமை அறியாதவர்களிடம் மலர்களை ஒப்படைத்தல் தவறான செயலாகும். நமது நாட்டில், மாணவர்கள் திரளாகப் படைப்பயிற்சி பெறுவது இன்றியமையாததாகும்.

## எதற்காக கோபம்?

கோவை மகாநாட்டின் தீர்மானங்களைக்கண்டு, சென்னை சுயேச்சைக் கட்சி மந்திரிமார்கள் மருளுகின்றனர். தனித்த ஒரு வகுப்பாரை பகைப்பது கூடாது என்று மந்திரிமார்கள் கூறுகின்றார்கள். இந்தப் பகுதியை மட்டும் நடுநிலைமையிருப்பவர்கள் ஆதரிப்பார்கள். ஆனுல் சுயேச்சைக்கட்சியாரை மந்திரிப் பதவியினின்றும் வீழ்த்துதல் கூடாது என்று அவர்கள் குறிப்பிடுவதை நாம் ஆதரிக்க முடியாது. சுயேச்சைக் கட்சியார் ஒருதனிக் கட்சியாகத் தேர்தலுக்குச் செல்லவில்லை. வேலைத்திட்ட மொதையும் அவர்கள் குறிப்பிடவுமில்லை. எத்தகைய கொள்கை கொண்டவர்கள் என்றும் வெளிப்படையாக எவருக்கும் இதுவரையிலும் தெரியாது. இரட்டையாட்சியைப் போற்றும் கூட்டத்தார்கள் அவர்கள் என்று மட்டும் சென்னை மாகாணத்தார் அறிவார்கள். மேலும் நாட்டுக்கு நன்மை பயக்கக்கூடிய எதையும் செய்ய இதுவரையிலும் அவர்கள் முயற்சி செய்ததாகவும் தெரியவில்லை. எந்தக் கட்சியிலும் சேராமல், வௌவால்களைப்போல, அதிகாரவருக்கத்தினரோடு ஒட்டிக் கொள்ள முயன்றுவரும் கூட்டத்தாரை, பொறுப்புள்ள பதவியினின்றும் நீக்குவதுதான் பொது ஜனங்களின் கடமையாகும். இது சம்பந்தமாக, கோவை மகாநாட்டில் செய்யப்பெற்ற தீர்மானத்தை சென்னை மாகாணத்தில் பெரும்பாலார் ஏற்றுக் கொள்ளுவார்கள் என்பதில் ஐயமில்லை. எனவே, எதற்காக கோபம் என்று நாம் அவர்களை வினவுகின்றோம்.

## அநியாயம்.

ஓ ஹிக்கின்ஸ் அவர்கள் அயர்லாந்து தேசத்தின் நீதி இலாகா மந்திரியாக இருந்தார். அயர்லாந்தின் பெரும்பகுதி இப்பொழுது அயர்லாந்து சுயேச்சை அரசாங்கத்தின் கீழ் இருக்கிறது. சுயேச்சை அரசாங்கத்தார் ஆங்கில நாட்டுடன் உடன்படிக்கை செய்து கொண்ட கட்சியைச் சேர்ந்தவர்கள். இவர்களை எதிர்த்து நிற்பவர்கள் டிவலேரா அவர்களைத்தலைவராகக் கொண்ட குடியரசுக்கட்சியார். குடியரசுக் கூட்டத்தாருக்குள் இரகசியக் குழாம் ஒன்று இருப்பதாகவும் அவர்கள் எதிரிகளை இரகசியமாகக் கொலை செய்வதில் பின் வாங்குவதில்லை எனவும் கூறப்படுகின்றது. இது எவ்வளவு தூரம் உண்மை கொண்டது என்பதை நாம் அறியோம். சென்ற சில நாட்களுக்கு முன்னர், ஓஹிக்கின்ஸ் அவர்கள் மறைந்து நின்ற ஒரு சிலரால் சுட்டுக் கொல்லப்பட்டார். இது எந்த அனியாயக்காரர்களின் வேலை யென்று, இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. யோக்கியர்களையும் பலவான்களையும் கண்டால், குழப்பத்தை உண்டாக்குபவர்களுக்குப் பிடிக்காது. சமூகம் கலக்கப்படலாம். ஆனுல் நிர்வகிக்க முடியாத குழப்பம் ஏற்பட வேண்டும் என்று கருதுபவர்களின் செயல் வெறுக்கத்தக்கதாகும். ஓ ஹிக்கின்ஸ் அவர்களின் கூட்டத்தாரைத் தேர்தலில் தோற்கடிப்பதை விடுத்து, தனியாட்களைக்குறி வைத்துத் தொலைப்பது, நேரான அரசியல் போராட்டமாகாது. இச்செயல்களால், எந்தச் சீர்திருத்தத்தையும் நிலைக்கச் செய்ய முடியாது. பொறுப்பை ஏற்காத எதிர்ப்பு இழிவு கொண்டது என்று கூறவும் வேண்டுமோ?

## தோற்றவில்லை.

எகிப்து சுதந்திரம் வேண்டி நிற்கின்றது. அதற்காக அது பெரிதும் போராடி வருகின்றது. அந்த நாடு சுதந்திரத்தின் பொருட்டு செய்த தியாகங்களுக்கும் அனுபவித்த இன்னல்களுக்கும் ஏற்றதாக, இன்னும் நற்பயன் ஏற்படவில்லை. பெயரளவிலே, எகிப்துக்கு ஒரு மன்னன் இருக்கின்றார். அவர் ஆங்கில ராஜ தந்திரிகளின் எந்த இழுப்புக்கும் அகப்படும் தவிக்கும் சூத்திரப்பாவையாவார். அவர் இப்பொழுது ஆங்கில நாட்டுக்குச் சென்றிருக்கிறார். அங்கு அவருக்கு “விளக்கெண்ணெய்” விருந்துகள் நடைபெற்று வருகின்றன. அதாவது அவர் வெகுமரியாதையுடன் நடத்தப்பெற்று. மந்திரிமார்களாலும் ஜியார்ஜ் மன்னர் பிரானுலும் உபசாரத்துடன் விருந்தளிக்கப்பட்டுவருகின்றார். எகிப்து நாடு சுதந்திரம் பெறுதவரையிலும், இத்தகைய விருந்துகளை அவமானமாக, எகிப்திய மன்னன் கருதுவதாகத் தோற்றவில்லை. குளிர் காலத்தில் பன்னீர் தெளிக்கும் உபசாரம் எத்தகைத்து, எந்த நோக்கம் கொண்டது? எகிப்திய நாட்டை முன்னேற விடாமல் தடுத்துவிட்டு, அந்த நாட்டின் மன்னனுக்கு, ஆங்கில அரசியல் நிர்வாகிகள் விருந்தளிப்பதற்கு நேரான பொருள் கூற முடியுமா? எகிப்திய மன்னன் இத்தகைய விருந்துகளால்ஏமாந்து போகலாம். ஆனுல் சுதந்திரமின்றி வாடித்தவிக்கும் எகிப்தியப் பொது ஜனங்கள் கூடவா ஏமாந்து போவார்கள்? அரசனுக்கு கஜானு இருக்கிறது. அது பொது ஜனங்களின் வயிற்றைக் கவனிக்குமா?

## இன்றியமையாத விளைவு.

சென்னையில் அர்பத்நட் பாங்கி இருந்ததென்பதை நண்பர்கள் மறந்திருக்க முடியாது. அந்த பாங்கி சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் முறிந்து போய் விட்டது. உடனே, நூற்றுக் கணக்கானவர்கள் (பாங்கியில் பணம் போட்டிருந்தவர்கள்) பாங்கியின் வாயிற்படிக்கு எதிரே சென்று, அடித்து மோதிக் கொண்டு அழுதார்கள். அப்பொழுது ஒரு சிலருக்குப் பைத்தியம் பிடித்தது. இவ்வாறு சிலருக்குப் பித்துக் கொண்டது இந்தியாவின் பொறுக் கொணுத வறுமையின் இன்றியமையாத விளைவாகும். சென்ற ஐரோப்பியப் போர்க்காலத்திலும், அதற்குப் பின்னரும், ஐரோப்பியர்களின் நரம்புகள்நல்ல நிலைமையில் இருக்கவில்லை என்றே கூறலாம். திரளான நிகழ்ச்சிகள் கொடிய வேகத்துடன் நேருமாகில், அவைகளைத் தாங்கவல்ல நரம்பு வலிமை பெரும்பாலாருக்கு இருக்க முடியாது. ஜர்மானியர்கள்,ஐரோப்பியர்களுக்குள், சிறந்த உடல்வலிமை கொண்டவர்கள். இது யாவராலும் ஏற்கப்பெற்றதாகும். ஆனுல், சில நாட்களுக்கு முன்னர் கொடுமையுடன் ஜர்மனி நாட்டில் அடித்த புயற்காற்றினுல், நூற்றுக் கணக்கானவர்கள் இறந்து போனதாயும் பலர் பித்துக் கொண்டதாயும் செய்தி கூறுகின்றது. நரம்பு வலிமை என்பது சிறப்பான சக்தியாகும். அது ஆகார நிறைவினுல் ஏற்படக் கூடியதல்ல. நரம்புவலிமையற்றவன் எத்தகைய பெரிய காரியத்தையும் செய்து முடிக்க முடியாது. ஒரு நாட்டின் நரம்பு வலிமையைக் கொண்டு, அதன்சமிப்புத்தன்மையை அளக்கலாம், அளக்க வேண்டும். ஜர்மானியர்களிற் பலருக்கு புயற்காற்றினுல் பைத்தியம் பிடித்தது தனி நிகழ்ச்சியல்ல. அது பொதுவான ஐரோப்பிய மனப்பான்மையின் போக்கின் இன்றியமையாத விளைவாகும்.

## சரியன்று.

“முஸ்லிம் அவுட்லுக்” என்று ஒரு பத்திரிகை லாகூர்நகரில் நடைபெற்று வருகின்றது. “ரங்கில ரசூல்”என்ற நூலை ராஜபால்என்ற ஹிந்து எழுதி வெளியிட்டாராம். அந்த நூலில், மகம்மது நபியை கம் கேவலமாகத் தாக்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகின்றது. இந்த நூலைப்பற்றி, “முஸ்லிம் அவுட்லுக்” பத்திரிகை கண்டித்து எழுதியிருந்தது. பத்திராதிபர் குற்றம் சாட்டப் பெற்று, தண்டனையடைந்தார். உயர்தர நீதி மன்றத்தில், இந்த வழக்கின் அப்பீலை விசாரித்த நீதிபதி தலிப்சிங் அவர்கள் தண்டனையை உறுதி செய்தார். நடுநிலைமை தவறி, பட்சபாதம் கொண்டு, இவ்வாறு நீதிபதி தீர்ப்புச்சொன்னுர் என்றும் அவரை வேலையினின்றும் அரசாங்கத்தார் நீக்க வேண்டுமென்றும் முஸ்லிம்கள் நாடெங்கும் கண்டனக் கூட்டங்கள் கூட்டிவருகின்றார்கள். “குறை கொண்ட சட்டத்திற்கேற்ப நாம் தீர்ப்புச் சொல்ல வேண்டுமென்றும் சட்டம்திருத்தப் படல் வேண்டுமென்றும் நீதிபதி தமது தீர்ப்பில் குறிப்பிட்டிருக்கின்றார். காந்தியைத் தண்டித்த நீதிபதியும் இவ்வாறே கூறியிருப்பதை நண்பர்கள் மறந்திருக்க முடியாது.வகுப்பு அபிமானம்கொண்டு தான் செயல் செய்ய முடியும் என்ற முடிவுக்குநாம்வருவோமானுல்,இந்தியர்கள் ஒருநாளும் சுயராஜ்யத்துக்குத் தகுதியுள்ளவர்களாயிருக்கப் போவதில்லை இந்தத்தீர்ப்புசம்பந்தமாக, முஸ்லிம்கள் காண்பிக்கும் மனப்பான்மை மூலமாய், நாட்டின் ஒற்றுமை ஒரு நாளும் பலிக்கப் போவதில்லை. மௌலான முகம்மது அலி கூறுவது போல, நேர்மையான சட்டத்தை ஆக்க, பொது ஜனங்கள் அரசாங்கத்தாரை நெருக்க வேண்டும். அரசாங்க நிர்வாகம் பொது ஜனங்களின் வயம் வருமனவும், நாட்டில் மேற்கூறிய நிகழ்ச்சிகள் மலிந்து நிற்கும் என்று கூறுவதை யாரே மறுக்க முடியும்?

## காலஞ் சென்றார்.

ஸர்.கங்காராம் அவர்கள் காலம் சென்றார். கங்காராம் அவர்கள் யார் என்று நண்பர்கள் வினவலாம். பாஞ்சால நாட்டில் விதவா விவாக முயற்சிக்கு ஊக்கம் அளித்தவர் கங்காராம். அவர்கோடீசுரர். அரசாங்கத்தில் பெரிய உத்தியோகம் வகித்தவர். பின்னர் வேலையினின்றும் உபகாரச் சம்பளத்துடன் நீங்கி, ஏராளமாக பூமியை விலைக்கு வாங்கி, விவசாய செய்கை முறையைக் கைக்கொண்டு, [illegible] திருத்தி, [illegible] [illegible] பாஞ்சால விவசாயிகளுக்கு [illegible] காட்டியுள்ளார். இந்தியாவில் சமீப காலத்துக்கு முன்னர் [illegible] பிரயாணம் செய்த விவசாய [illegible] ஸர் கங்காராம் அவர்கள் அங்கத்தினராயிருந்தார். பின்னர், ஆங்கில நாட்டுக்கு [illegible] சென்றிருக்க காலையில், அவர் அங்கு உயிர் துறந்தார். ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு [illegible] காரர்கள் தேவை. [illegible] கள் இல்லையானுல், [illegible] பட முடியாது. ஆனுல் [illegible] காரர்கள் சமூகத்துக்கு [illegible] அறைகளிலும் நன்மையை நாட முடியாது. [illegible] வேலையை பெரும்பாலும் [illegible] செய்யும் ஆற்றல் கொண்டவர்கள் லர். [illegible] வேலைத் திட்டத்தை ஏற்று, மௌனமாய்த் தொண்டு செய்யும் மனப்பான்மை கொண்டவர்கள் நாட்டை, உறுதியாக முன்னேறச் செய்ய முடியும். மௌனமாக வேலை செய்யும் அருமையான கூட்டத்தைச் சேர்ந்த ஸர் கங்காராம் அவர்கள் இறந்ததைக் குறித்து, நாம் வருந்தாமலிருக்க முடியுமா? ஆடம்பரமின்றி நாட்டுக்கு உழைப்பவர்கள் ஒரு [illegible] ரே யாதலின், அக்கூட்டம் மெலிவடைந்து போனுல், அதைக் கண்டு யார்தான் உள்ளம் [illegible] யிருக்க முடியும்?

## உள்ளூர்.

| | |
|---|---|
| சென்னை [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] |
| [illegible] (Burjana) | [illegible] |
| [illegible] | [illegible] |
| சென்னை [illegible] (குளி) | [illegible] |

[illegible] நிலை:—

[illegible]

[illegible]

### சம்பாவனை.

[illegible] சாமி செட்டியாரவர்கள் [illegible] சந்தர்ப்பத்தில் ரூ. (௫) சம்பாவனை செய்துள்ளார்கள். [illegible] [illegible] [illegible] எழுதுகிறோம்.

### அரிய சொற்பொழிவு.

[illegible] சொ. முருகப்பருடைய [illegible] ஈ. வே. ராமசாமி நாயக்கர் [illegible] பற்றி அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினர். திரு. [illegible] [illegible] சுமார் [illegible] [illegible] [illegible] [illegible] நாயக்கர் அவர்கள் [illegible] செய்வார் என்று ஒரு [illegible] எழுதுகிறோம்.

## கடிதங்கள்.

### கல்விக்கழகம்.

தனவணிக நாட்டுக்கல்விக் கழகக்காரிய தரிசி பின்வருமாறு அறிவிக்கிறார்:—கொப்பனுபட்டி நகரத்தாரால் நடத்தப் பெறும் மாணிக்கவாசக வித்தியாசாலை கல்விக்கழகத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. கல்விக் கழகச் சார்பில் நடக்கும் பள்ளிக் கூடங்களுக்குப் பரிசோதகராகதிரு. ப. நாராயண அய்யாரை நியமனம் செய்யப்பட்டிருக்கிறது.

### சம்பாவனை.

ஆத்தங்குடி முத்துப்பட்டணம் நாவுக்கரசு நற்சபைக்கு முத்துப்பட்டணம் திருவாளர் சி. நா. சி. ராம, நா. இராமசாமிச் செட்டியாரவர்கள் தமது குமாரன் சிரஞ்சீவி நாச்சியப்பனுக்கு நாளிது வைகாசித்திங்கள் முப்பத்தொன்றாம் நாள் நடை பெற்ற கல்யாணத்தில் ரூபாய் ஐந்து சம்பாவனை செய்துள்ளார்கள். அவர்கட்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம் என்று காரியதரிசி சித. நாராயணன் செட்டியார் எழுதுகிறார்.

### அனுதாபம்.

திருவாளர் ஏ. டி. ஏ. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்கள் (நடராஜபுரம் ஏ. டி. ஏ. முத்தையா செட்டியாரவர்களின் மகன்) அகால மரணம் எய்தியதற்கு, பர்மா ஜீவ காருண்ய சங்க நிர்வாக சபையின் அங்கத்தினர்கள் வருந்தி, காலஞ்சென்ற சகோதரரின் தகப்பனுருக்கும், அவருடைய முதலாளி காட்டரசங்கோட்டை வி. கே. என். வி. கண்ணப்ப செட்டியாருக்கும் தங்கள் அனுதாபத்தைத தெரிவிக்கின்றார்கள்.

### சிவநேசர் திருக்கூட்டம்.

திருக்கூட்டத்தார் நாளிது ஆனிமீ ௨௨உ ஆனித்தரிசனத் திருநாளை முன்னிட்டு ஆவுடையார் கோவிலுக்கு வந்து அன்று ஆலயதரிசனமும் உ௩உ மாணிக்கவாசக சுவாமிகள் திருத்தேர் தரிசனமும் செய்து கொண்டனர்சமணிமுதல்சிவநேசச்செல்வர்களான மெ. ஞானசம்பந்தச் செடடியார் அக. பொன்னுசாமி முதலியார், கா. கா. அள. காளையப்ப செட்டியார் முதலிய மூவர்களும் சொற்பொழிவு செய்தார்கள். உ௪உ முற்பகல்,பிற்பகல்களில் சிவநேசச் செல்வர்களான முத்த. வெ. சொக்கலிங்கச் செட்டியார் அக. பொன்னுசாமி முதலியார், சேவு. மெ. மெய்யப்பசெட்டியார் அமராவதி புதூர் அ. வேங்கடாசலச் செட்டியார், தமிழ்ப்பண்டிதர் நமச்சிவாய முதலியார் ராம. கு. ராம ராமசாமி செட்டியார் முதலிய அன்பர்களது பிரசங்கங்கள் நடைபெற்றன. அரிமழம் சிவநேசச் செல்வர் அ. அரு. திருவாசக மடத்தில் திருவிழாப் பத்து நாட்களும் வருகிற அன்பர்கட்கும் திருக்கூட்டத்தார்கரும் நன்கு உபசரித்தது போற்றததக்கது என்று காரியதரிசி எழுதுகிறார்.

### கொழும்பு.

கதிர்வேலாயுத சுவாமி இரத மகோற்சவம்:— கதிர்காமம் என்ற அற்புத க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கதிர்வேலாயுத சுவாமி ஆண்டுதோறும் ஆடிமாதப் பௌர்ணமித் திதியில் உபய கதிர்காமமாகிய வெள்ளவத்தைக்கு மகோற்சவங் கொண்டெழுந்தருளி திருவுலாப்போந்து அனைவருக்கும் திருக்காக்ஷி கொடுத்தருளுவது வழக்கம். அவ்வாறே நிகழும் பிரபவ ஆண்டு ஆடித் திங்கள் உ௭உ காலை எழேமுக்கால் மணிக்கு ஸ்ரீ கதிர்வேலாயுத சுவாமி தங்க இரதத்தின் மேல் ஆரோகணித்து, பல வாத்தியங்கள் முழங்கத் திருவுலாக் கொண்டு வெள்ளவத்தையை யடைந்து, அங்கு ஆலயத்தில் வீற்றிருந்து, அடியார்கள்செய்யும் வழிபாடுகளை எற்றருளுவார். இருபத்தெட்டாம் தேதி எண்டிசைகளினின்றும் வரும் பல்லாயிரவர்களான பக்த கோடிகள் செய்யும் ஆராதனைகளை எற்றருளிக்கதிர்காமக்காக்ஷிதந்து, இருபத்தொன்பதாம் தேதியும் அவ்விடத்திலேயே அடியார்கள் யாவரும் ஆனந்தமடையும் வண்ணம் எழுதருளியிருந்து, ௩௧,௩௨, ௩௩,௩௪. உ க்ளில் நடக்கும் விமரிசையான மகேசுவர பூசையையும் கடாக்ஷித்து, முப்பதாம்தேதி மாலை நாலுமணிக்கு முற் கூறிய விமரிசைகளோடு, சர்வாலங்கார பூஷிதராய், தங்க இரதத்தின்மீது ஆரோகணித்து, திருவோலக்கமாகத் தமது திருக்கோயிலினுட் சேர்ந்தருள்வார் என்று கொழும்பு நகரத்தார் அறிவிக்கின்றனர்.

### கூழிபிலை.

சிவனடியார் திருக்கூட்டத்தாரின் அநுதாபம்:—செந்தமிழ்த்தாயின் உத்தமப் புத்திரர்களுள் ஒருவரும், பல பொது ஸ்தாபனங்களில் அங்கம் வகித்து பொது நல ஊழியங்கள் பல புரிந்தவரும், நாங்கள் பன் முறை நடத்திக் காண்பித்த, பல்லோரின் அன்பைப் பெற்ற ஜீவகாருண்ய நீதி மன்றம் முதலிய பல நூல்களின் ஆசிரியருமான, ஸ்ரீமான், ஆத. ஆ. சொக்கலிங்க அய்யா அவர்கள் தமது காசியாத்திரையின் பின்னர்,காய்ச்சல் வாய்ப்பட்டுஉயிர்நீத்ததாகக் குமரனில்கண்டதும் அளவிலாத் துக்கத்தில் ஆழ்ந்தோம். அவர்களது உற்றார் உறவினர், அனைவருக்கும், நமது திருக்கூட்டத்தின், உபகாரியதரிசியாயிருந்து, அந்நிய நாட்டுக்குச் சென்றிருக்கின்ற ஸ்ரீமான். தெ. நா. ராம. சோமசுந்தரச் செட்டியாரின் செல்வப்புதல்வன் இறந்தது பற்றி அன்னவர்கட்கும், நமது திருக்கூட்டத்தின் சார்பாக, எனது ஆழ்ந்த அநுதாபத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன் என ஷை திருக்கூட்டத்தின், அந்நிய நாட்டுப்பிரதிநிதிகளிலொருவர் அறிவிக்கிறார்.

### மைடான் டில்லி.

ஐக்கிய இந்திய சங்கம்:—நமது சங்கத்தின் அ-வது கூட்டம் (உ௧-௬-உ௭) மாலை மணி எ-க்கு பீமத்தாங்கியாந்தார் உயர்திரு. வெ. பெரி. பெரியகருப்பஞ் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஏராளமான ஜனங்கள் குழுமியிருந்தனர். அவைத்தலைவருக்கு மாலை சூட்டியபின், திரு. கரு. பெரி. பெரியய்யா அவர்கள் "மூட நம்பிக்கை"யைப் பற்றியும் திரு. கரு. கும. சோமசுந்தரன் 'திருக்குற்றால' நகர இயற்கை அழகைப்பற்றியும் ஸ்ரீ ஜோஸப் தாஸ் "இந்தியாவின் இடி முழக்கம்" என்பதைப் பற்றியும் விஸ்தாரமாகவும், உத்ஸாகமாகவும் பிரசங்க மாரி பொழிந்தார்கள். முடிவாக அவைத் தலைவர் பேசுகையில், மக்களாகப் பிறந்தார் இயற்கை இன்பந்துய்க்க வேண்டுவ தவசியமென்றும், காம் கடல் கடந்து, அரும்பாடுபட்டுத்தேடும் திரவியத்தை நம் நாட்டில் உபநயனம், சீமந்தம், கலியாணம், வீடு கட்டுதல், ஆதிய காரணங்களைச்சொல்லி ஏமாற்றும் ஒரு வகுப்பாருக்குச் சிறிதும் உதவி செய்யலாகாதென்றும் பெண்கட்கு கல்வியும், சமத்துவமும் அளிக்கவேண்டுமென்றும், உடனழைத்து வரலால் உள்ள நலன்களைப் பற்றியும் தென்னத் தெளிய விளக்கிக் காட்டினார்கள். சொக்கலிங்கம், சீனிவாசன் ஆகிய மாணக்கர்களால் சுயேச்சைப் பாடல்களும், சுயமரியாதைப் பாடல்களும் பாடப்பெற்றன. தலைவருக்கு மல்லிகை மாலை அணிவித்து, சிற்றுண்டி வழங்க,கூட்டம் மணி ௧௧க்கு இனிது நிறைவேறியது என்று கௌரவ காரியதரிசி எழுதுகிறார்.

### தேவகோட்டை.

இவ்வூர் தேவிமீனுக்ஷி பாட்மிண்டன் கிளப் ஏற்படுத்துவதற்கு ரொம்ப முயற்சி செய்த கமுதி, திருவாளர் பொ. சுப்பிரமணிய பிள்ளை அவர்களை இங்கிருந்து வேற்று நகருக்கு மாற்றிவிட்டதைப்பற்றி உ-௭—உ௭உ மாலை ௬-மணிக்கு திருவாளர் கரு.கதி.நாச்சியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் ஓர் கூட்டம் கூடியது. அவ்வமயம் இக்கிளப்பின் பிரஸிடெண்டு திருவாளர் அள.வீர.அள வீரப்பசெட்டியார்,வைஸ் பிரஸிடெண்டு சோம. லெ. லெட்சுமணன் செட்டியார் கரு. ராம. சோம. கண்ணப்ப செட்டியார் இக்கிளப அபிமானிகள் திருவாளர் அள. வீர. அள. அருணாசலம் செட்டியார் திருவாளர் மெ. சி. மாணிக்கவாசகன் செட்டியார் ஆகியவர்களால், அன்பர் திருவாளர் சுப்பிரமணியபிள்ளை அவர்கள் இக்கிளப்பில் பாராட்டிவந்த நட்பு விஷயங்களைப்பற்றி சொற்பெருக்குகள் நிகழ்ந்தன. தலைவரவர்கள் முடிவுரை கூறியபின் இக்கிளப்பார் சுப்பிரமணியபிள்ளை அவர்களுடன் எடுக்கப்பட்ட போட்டோ படத்தையும் வேற்று நகர் செல்வதை முன்னிட்டு அன்னார்க்கு ஒரு பத்திரமும் வாசித்துக் கொடுக்கப்பட்டு ௭மணிக்கு புதூர் சத்திரத்தில் இக்கிளப்பாரால் எல்லார்க்கும் டீ பார்ட்டியும் வைக்கப்பட்டது. ௯-மணிக்கு இனிது நிறைவெய்தியது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## கப்பல்.

"எரின்புரா" கப்பல் சென்ற திங்கட்கிழமையன்று சென்னை வந்து சேர்ந்தது. நாளது-மீ ௭உ வெள்ளிக்கிழமையன்று ரங்கூனுக்குப் புறப்படுகிறது.

"டைரியா" கப்பல் நாளை சென்னைத் துறைமுகத்துக்கு வந்து சேருகிறது. நாளது ஆடி-மீ ௭உ வெள்ளிக்கிழமை யன்று நாகப்பட்டினம் வந்து அங்கிருந்து ௯உ ஞாயிற்றுக்கிழமை யன்று மலாய் நாட்டுக்குப் புறப்படுகிறது.

### இஷ்யூக்களைத்தீர்ப்பதற்கான ஸப்ஸ்டிடியூட் செய்யப்பட்ட சம்மன்கள்.

(ஸிவில் புரோஸிஜர் கோட் ஆர்டர் 5-ல் விதி 1-ம் 5-ம்)

(பர்மா) மாக்வி டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் சிவில் ரெகுலர் 1927-ல் ரெ. 2.

ராமன் செட்டியார் (எஸ். எம். எ.ஆர். எஸ். கடை மானேஜிங் பங்குதார் ஹோதாவில்) — வாதி.

கே. பி. எஸ். சோமசுந்திரம செட்டியார் — பிரதிவாதி.

கே. பி, எஸ். சோமசுந்திரம் செட்டியாருக்கு (முன் எஸ். எம். எ. ஆர். எஸ். கடை எஜண்டாயிருந்தவர் கடியாப்பட்டி புதுக்கோட்டை ஸ்டேட்.)

ரு வாதி உம்மிடமிருந்து நஷ்டஈடாக 15000 வர வேண்டுமென உம்மீது ஒருசா வழக்குத் தொடுத்திருக்கிறார். நீர் நேரிலாவது அல்லது கிரமப்படி அதிகாரம் பெற்ற எஜண்ட மூலமாகவாவது அல்லது அட்வகேட் மூலமாகவாவது அல்லது சரியான கற்பனை பெற்றவரும், வழக்கு சம்பந்தமான எல்லாக் கேள்விகளுக்கும் சரியானபதிலை சொல்லக் கூடியவரும் அல்லது அப்படிப் பட்ட எல்லாக் கேள்விகளுக்கும் சரியாக பதிலைச் சொல்லக் கூடியவரை துணையாகக் கொண்டோ, 1927-ஹு ஆகஸ்ட்-மீ 3-உ புதன்கிழமையன்று பகல் 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராக வேண்டுமென்று உமக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது. நீர் அவ்விதம் ஆஜராகத்தவறினால் நீர் ஆஜரில்லாமலிருக்கையிலேயே இஷ்யூக்கள் முடிவு செய்யப்படுமென நீர் அறியவும்.

உமக்கு ஆதாரமாக விளக்கும் டாக்குமெண்டுகளை உங்கள் கூடவோ அல்லது உமது அட்வகேட் மூலமோ கொணரவேண்டும். நீர் எழுதது மூலமான ஸ்டேட்மெண்டு பைலில் செய்யவிரும்பினால் வாய்தாவுக்கு 4 நாள் முன்பு அவ்விதம் செய்யலாம்.

என்னுடைய கையொழுத்தும் கோர்ட் முத்திரையும் 1927-ஹு ஜூன்-மீ 23-உ யாக இன்று போடப்பட்டது.

BAPE

அடிஷனல் ஜில்லா கோர்ட் ஜட்ஜிக்காக (மாக்வி.)


சிரிப்பு! ஓயாச் சிரிப்பு!!

சிரித்து சிரித்து வயிறு புண்ணாய் விட்டதென்று ஒருவர் எழுதுகிறார்.

முத்துமாமா.

(2-ம் பதிப்பு)

நேயர்களே! இந்தச் கதையைப் படித்து விட்டால் நீங்கள் சாப்பிடும்போதும் சிரிப்பீர்கள். தூங்கும்போதுகூட சிரிப்பீர்கள். வேண்டுவோர் 4½ அணா ஸ்டாம்பு அனுப்பவும். எந்த தேசத்து ஸ்டாம்பாயிருந்தாலும் அனுப்பலாம்.

வாசன் புஸ்தகசாலை,
97, அண்ணாபிள்ளை தெரு, மதராஸ்.

நாணயமான ஜவுளி! மனதிற்குகந்த திஙுசு!!

நம்பிக்கையான ஜவுளி! திஙுசிற்குகந்த விலை!!

உமக்கு லாபம்.

வேண்மோனால் கீழ்கண்ட விலாஸத்திற்கு எழுதவும். தேவைப்படி நயம் சரக்குகளாக பலரகங்களிலும் எங்கள் சொந்த தரிகளில் தயாரித்த ஜரிகையுள்ளதும், இல்லாததுமான சேலைகள், கண்டாங்கிகள், அங்கவஸ்திரங்கள், கைலிசாரங்கள், பட்டு ஆடைகள் முதலியனவும், செட்டிபிள்ளைகளுக்கு உகந்த கோர்வைகோடி பேட்டு, செட்டிபிள்ளைகள் போட்டவேஷ்டிகள்,துப்பட்டாக்கள், பஸ்களுக்களும்,நைஸ் நூலில் தயார் செய்த மேலப்பாளயம் துயிலிசைஸ் சிட்டை வேட்டிகளும் ரொம்பவும் சரசமாய் கிடைக்கும், திஙுசு விபரத்திற்கு

இனம்! கேட்லாக்!! இனம்!!!

சரக்குகள் வீ. பி. மூலமும் பாங்குகள் மூலமும் அனுப்பப்படும்.

குறிப்பு:—வியாபாரிகளுக்கும், ஜாஸ்தி சரக்குகளுக்கு ஆர்டர் கொடுப்பவர்களுக்கும், 100-க்கு 3-2-0 வீதம் கமிஷன் கொடுக்கப்படும்.

விஸாலாக்ஷி அண் கோ

மதுரை (தென் இந்தியா.)

ஸ்ரீ நவீனகதா புத்தகசாலை.

நவீன நாவல்கள், அருமையான கதைகள், அற்புதமான சரித்திரங்கள், வேதாந்த சித்தாந்த இலக்கண இலக்கிய சங்கீத கிரந்தங்களும், மந்திரிககாவியங்களும் பள்ளிக்கூட புத்தக திஙுசுகளும் கிடைக்கும்.

விபரம் தெரிய விலை ஜாபதா இனம்.

சங்கமாரி வீதி, இரங்கோன்.





வெளியாய்விட்டது! வெளியாய்விட்டது!!

மணவாழ்க்கையின் மர்மங்கள்.

மூன்றும் பதிப்பு வெளியாய்விட்டது!!!

இவ்வரிண்புமிக்க நூலின் மூன்றும் பதிப்பு வெளியாய்ச் சில தினங்களே யாயின. இதில் பல திருத்தங்கள் செய்திருப்பதுடன் முன் படங்களுடன் புதிய ஆப்டோன் படங்களும் சாதாரண வேறு பல படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தமிழ் நாட்டாருக்கு இந்நூல் புதியதன்று. இதன் இரண்டு பதிப்பிலும் 5,000 பிரதிகள் இரண்டாண்டுக்குள் விற்றிருப்பதே இதன் அருமையைக் காட்டவில்லையா? பணம் பறிக்கும் பல நூல்களைப்போல் ஆபாசமாக எழுதப்பட்டதன்று.

இதில் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் சங்கோஜமின்றி அறிந்துகொள்ளவேண்டிய அதி நுட்ப விஷயங்கள் ஏராளமாக மலிந்து கிடக்கின்றன. விவாக தினத்தில் பெற்றோரும், உற்றோரும், சிநேகிதர்களும் மணமகன் மணமகளுக்குப் பரிசளிக்கத்தக்க கௌரவமுள்ள நூலாகும். புத்தக அமைப்போ காணக் கண்ணைக் கவரும். இதன் அருமையான விஷயங்களோ மனத்தைக் கவரும். கையிலெடுத்தோர் கீழே வைக்க மனந்துணியார். இதன் விலை ரூபா 2—4—0 தான். வெளி நாட்டார் ரூபா 2—12—0 முன் பணம் அனுப்ப வேண்டும். (எல்லாப் புத்தக வியாபாரிகளிடமும் கிடைக்கும்.)

மனோஹரம் கம்பெனி, தபாற் பெட்டி 248, சென்னை.


ALAGAPPA UNIVERSITY CENTRAL LIBRARY KARAIKUDI


இம்மருந்துகள் முதல்தர தேவ ஔஷதங்களென்று 1923-ல் திருநெல்வேலியில் கூடிய மெடிகல் கான்பரென்ஸ் அண்டு எக்ஸிபிஷனில் 2 தங்க மெடலும், "வைத்தியபதி" பட்டமும் 25-8-23-ல் சென்னையில் நடந்த ஷை கான்பரன்ஸ் & எக்ஸிபிஷனில் தங்கமெடலும் 'வைத்திய ஆசிரியர்' என்ற பட்டமும் பெற்றவர்.

இழந்துபோன பலத்தை ஒரு குளிகை சாப்பிட ஆறு மணி நேரத்தில் கொடுக்கும்

தங்கமாத்திரை

இது உலகமெங்கும் புகழ்பெற்றது! ஆச்சரியமான குணம்!! மிக இன்பமான சுகம்!!!

தாதுபுஷ்டிக்கு நிகரற்ற மருந்து. இதற்கு நிகரான மருந்து ஒன்றுமேயில்லை. ஒரே குளிகையில் பரீக்ஷை பார்க்கலாம். நரம்புகளை பலப்படுத்தி தேகத்திற்கு வலுவைக் கொடுக்கும். அதிக வயதாலும் பலஹீனத்தாலும் நேரிட்ட சகலவித சோர்வு ஆண்மைக்குறைவு, முதலியவைகளை நீக்கி, தாதுக்கட்டை உறுதிப்படுத்தி, ஊக்கத்தைக் கொடுத்து, இல்வாழ்க்கையில் இன்பத்தைப் பெறுக்கி பால்யம், யௌவனம், விருத்தாப்பியம், இந்தப் பருவங்களில் அடையவேண்டிய காலத்திற்கு முன் அடைந்த விபரீதங்களை நிவர்த்தி செய்யும். கிழத்தனத்தை நீக்கி வல்லமையடையச் செய்வதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லை. பரிக்ஷைக்கும் பலனுக்கும் உத்தரவாம்.தங்கமாத்திரை 100 அனுபானம் மகாமன்மத காமேசுரி சாலாமிசிரி அல்வா 100-ம் சேர்ந்து ரூ. 10. 50 தங்க மாத்திரையும் 50 உருண்டை அல்வாவும் சேர்ந்து ரூ. 6.

நற்சாக்ஷி:—பினங்கு போர்டிக்ஸன் மிஸ்டர் B. K. டாஷன் H. K. C. எழுதுகிறார்:—தாதுபுஷ்டிக்கு அனேக டாக்டர்களிடம் அதிக பணத்தை விரயம் செய்திருக்கிறேன். தங்கள் தாதுபுஷ்டி மருந்துபோல் நான் பார்த்தமட்டிலும் எவ்விடமும் கிடையாது.

சிலோன் Talavakellew C. N. Navies எழுதுகிறார்:—எனது மிகவும் கனம் தங்கிய அய்யாவே! தங்களின் மிகவும் அருமையான தங்க மாத்திரையின் அனுபவத்தால் எனக்கு கிடைத்திருக்கும் பலன் மிகவும் கண்ணியமானவை! ஆனபடியால் கடவுள் மேன்மேலும் உங்களின் வேலைக்கார வர்த்தனை அருள்வார். தயவு கூடிய சீக்கிரம் என்பேரில் கிருபை பாவித்து இன்னம் 50 தங்க மாத்திரை அனுப்பிவைக்க வேண்டுகிறேன்.

வெள்வங்கபஸ்பம்.

மூலரோகத்துக்கு கை கண்ட மருந்து. ஆப்ரேஷன் தேவையில்லை, மூளை தானே கரையும். ரத்த மூலம், சீழ் மூலம், குத்தல், மூலமுளை, மலபந்தம் முதலிய 9 வித மூல ரோகத்தையும் வெகு சீக்கிரம் குணமாகும்.
உத்திரவாதமுள்ள திவ்விய ஔஷதம் புட்டி ரூ. 10.

கெற்பசஞ்சீவி என்ணெய்.

மாதாந்திர காலத்தில் வரும் பொறுக்கமுடியாத வயிற்று வலியை அரை மணி நேரத்தில் நிறுத்தும். சூதக க்ஷயம், சூதக சூலை, சூதக ஜுரம், சூதக வாய்வு, சூதகக்கட்டு, சூதகச் சிக்கல், சூதகச் திரக்ஷி, சூதக்கட்டினால் உண்டாகும் தலைவலி, கை கால் பொறுத்துகள் உளைவு, மேலெல்லாம் குத்து குடைச்சல், வயிறு பெருத்தல், முதலிய வியாதிகளெல்லாம் தீர்ந்து கற்பப் பை சுத்திகரிக்கப்பட்டு கற்ப உற்பத்தியும் உண்டுபண்ணும். 3 புட்டி ரூ. 6. சூதக வயிற்றுவலி இருக்கும்வரை கர்ப்பம் தரிக்காது. மேற்படி வலி தீர்ந்து கற்பம் தரிக்கவேண்டுமானால் 1 நபருக்கு 3 புட்டி வேண்டும். அனுபவத்தில் கைகண்டது.

பிரமேக நிவாரணி. எந்த மருந்திலும் தீராத எவ்வளவு நாட்பட்ட பிரமேகம், ரத்தமேகம், தந்தி மேகம், வெள்ளை வெட்டை, நீர்ச்சுருக்கு, கடுப்பு, குத்தல், எரிச்சல் உடனே நிற்கும். கண்டிப்பாய் 3 வேளையில் சௌக்கியமாகும். தவறாத விலை ரூ. 2.

பற்பொடி கல்நார் பஸ்பம். பொறுக்கமுடியாத பல்வலியை ஒரு நொடி நிறுத்தும். பல் அசைவு, பல் ஆட்டம், ஈகிர் சரவு, ஈகிர் வீக்கம், வலி, பல் சொத்தை விழுதல், இரத்தம் வடிதல், வாய் நாற்றம், பல் கூச்சல், இவைகளை உடனே நீக்கும். இதை விடாது பல் துலக்கி வந்தால் கண்டிப்பாய் பற்களை கெட்டிப்படுத்தும். 6 புட்டி விலை ரூபா. 1-2-0. டஜன் ரூபா 2. வீ. பி. சார்ஜ் அணா 8.

ஆயிரக்கணக்கான குஷ்டரோகிகள் சொஸ்தமடைந்திருக்கின்ற தாம்பர பஸ்பம் உங்களுக்கு வேண்மோனால் பழனி, ஆர். எம். கே. வேல்சாமி பிள்ளை அவர்களிடம்தான் கிடைக்கும். 100 வேளை அநுபானத்துடன் ரூ. 50 50 வேளை ரூ. 25. ஏழைகளுக்கு பாதி விலை. (பேப்பரைக் குறிப்பிட்டு எழுதவும்.)

வைத்திய ஆசிரியர், ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளை, சித்தவைத்தியசாலை, பழனி.

நமது பிராஞ்சு வைத்தியசாலை, ஏஜண்ட்:—என். தண்டபாணி கம்பெனி, 6-99, பவழக்காரத் தெரு, சென்னை.

